Muracoli

Muracu 2, oli 28

October 07, 1955

Record no. 945

முரசொலி

வார இதழ்

ஆசிரியர் மு. கருணாநிதி

2 அணா

முரசு 2 | சென்னை | 7-10-55 | வெள்ளி | ஒலி 28

# குறளோவியம்

கருணா

"காணிற்குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்
மாணிழைகண் ஒவ்வேம் என்று."

குவளை மலர்களுக்கு மட்டும் கண்கள் இருக்குமேயானால் அந்தக் கோமளவல்லியின் கண்களைக் கண்டு "அய்யோ! நாம், அவள் விழிகளைப்போல அவ்வளவு அழகாக இல்லையே" என்று தலை கவிழ்ந்து பூமியை நோக்குமாம்; அத்தகைய விழியழகி அவள்.

மென்மை நிறைந்த அனிச்ச மலர்களைக் காம்பு களையாமல் சூடிக்கொண்டாளாம். அந்தக் காம்பின் கனம் தாங்காமல் அவளது இடை நொந்து வருந்தியதாம்.

வானத்து வெள்ளி மீன்கள், திங்களையும் அந்த வடிவழகியின் வதனத்தையும் கண்டு, எது திங்கள்? எது அவள்?—எனக் கலங்கித் திரிந்தனவாம்! அன்னப் பறவையின் இறகு அவளது பாதங்களில் படும்போது நெருஞ்சிப் பழம் தைப்பது போலிருக்குமாம்—அத்தகைய பட்டு ரோஜாப் பாதங்கள் அவளுக்கு!

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்"

அழகின் இலக்கணமாகத் திகழும் அவளை தன் கண்களிலேயே குடிவைக்க விரும்புகிறான் ஒரு குமரன். விழி வீட்டில் இருப்பவரை வெளியேற்றிவிட்டல்லவா, எழிலரசிக்கு இடம்தர வேண்டும். ஆகவே "கண்ணக"த்தில் குடக்கூலிக்கு வசிக்கும் ஆளிடம் போய், "தயவு செய்து நீ வீட்டைக் காலி செய்துவிடு" என்று கெஞ்சுகிறான்.

வள்ளுவர் நடையில் அதைக் கேளுங்கள்:

"என் கண்ணின் கருமணியில் உள்ள பாவையே! நான் விரும்புகின்ற இந்த அழகிக்கு என் கண்ணில் இருக்க இடமில்லை — ஆகவே நீ வெளியேறிவிடு!"

பார்வை தரும் பாவையைப் போகச் சொல்லிவிட்டு, முத்துக் கோர்வை தரும் பாவைக்கு கண்ணில் இடமளிக்க விரும்புகிறான். அதற்குக் குறள்:

"கருமணியிற் பாவாய்! நீபோதாய்; யாம்விழும்
திருநுதற்கு இல்லை இடம்."

காதலியைத் தன் கண்ணில் குடியேற்ற முடியாமல் தவிக்கும் அந்தக் காதலனைக் கேலிபுரியும் வகையிலே காதலி பேசுகிறாள்:

"என் காதலர் என் கண்ணுக்குள்ளேயிருந்து போகவே மாட்டார். கண்ணை மூடித் திறந்து இமைத்துக்கொண்டேயிருந்தாலும், அவர் வருந்தமாட்டார். ஏனெனில் அவர் அவ்வளவு நுட்பமானவர்." இந்தச் சேதியின் மூலம், காதலனைத் தன் கண்ணில் குடியேற்றிவிட்ட ரகசியத்தை அவள் கூறுகிறாள். அவனோ தலை குனிகிறான். இதற்குக் குறளோவியம்:

"கண்ணுள்ளின் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர் எம் காதலவர்."

அனந்த சயனம்ஜி 'ஹரிகதாவில்' உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்

பார்லிமெண்ட் விவகார அமைச்சர் நடக்குவரும்போது 'கதக்களி'பாணியைக் கடைப்பிடிக்கலாம்

தேஷ்முக் மேனேஜிங் ஏஜன்சிகளிடம் 'ஜலியட்டாக' நடிக்கலாம்

டி. டி. கே. வாணிபக்கொள்கையை பிரதநாட்டியத்தின் மூலம் விளக்கலாம்

திட்டங்களைப் பிரபலப்படுத்த கேஸ்கர் சினிமா சங்கீதத்தை உபயோகித்துக்கொள்ளலாம்

இவைகளும் வெற்றிபெறவிட்டால்... சினிமா நட்சத்திரங்களை அழைத்து கிரிக்கெட் மாட்ச் நடத்தலாம்

## 'கோரம்' சேர்க்க!

மக்களது வரிப் பணத்திலிருந்து மாதாமாதம் புதுப் புது நோட்டுகளாக ஊதியம் பெறுகிறார்கள், மக்களின் பிரதிநிதிகள் என்று பெருமைப் படும் எம். பி.க்கள்.

அவர்கள்தான் சில மணி நேரம் பாராளு மன்றத்திலே உட்காருவதில்லையாம். இதனால் 'கோரம்' இருப்பதில்லையாம். சபாநாயகர் நிமிஷத்துக்கொரு தடவை மணி அடித்து ஆள் சேர்ப்பாராம்.

'கோரம்' இல்லாதமைக்கு டில்லியிலே மெம்பர்கள் அனைவரும் வேடிக்கை பார்க்கச் சென்று விடுவதுதான் காரணம்—என்கிறார் அனந்த சயனம் அய்யங்கார். அப்படியானால் பார்லிமெண்டில் அங்கத்தினர்களைத் திரட்டுவதற்கு இனி படத்தில்கண்ட வழிகளைக் கையாளலாமே! என்று சிபார்சு செய்கிறது இந்தியாவின் முதல்தர கார்டூன் பத்திரிகையான 'சங்கர்ஸ் வீக்லி'

Best copy available

# சென்னை நகர் தேர்தல்-ஒரு விளக்கம்.

## ஆள் இழுக்கிறார்கள் - ஆவடிக்காரர்கள் !

காங்கிரஸ், வெற்றி வாகை சூடிவிட்டது. சென்னை நகராண்மைக் கழகத் தேர்தலில் 38 இடங்களைக் கைப்பற்றிக் கொண்டது—என்று காங்கிரஸ்காரர்கள் ஜெயகோஷமிசைப்பர். "பாரீரோ காங்கிரஸ் செல்வாக்கினை—கேளீரோ அதன் கீர்த்தியினை' என்று வாய்வலிக்க, மனம் களிக்கப் பேசுவர்.

ஆச்சாரியார் காலத்தில் காங்கிரசுக்கு கிடைத்தது 29. காமராசர் காலத்தில் பெற்ற இடம் 38. அதிகப்படியாகப் பெற்றுள்ளதோ 9 என்று கணக்கிட்டுரைத்து [illegible] உயர்ந்து விட்டதாக அகமகிழ்வு கொள்வர். அவர் காலத்தில் காங்கிரஸ் கரைந்து கொண்டு போனது—இவர் காலத்திலோ காங்கிரஸ் வளர்ந்து கொண்டு போகிறது என்று காமராசரின் விருதைக் கூறி வீராப்புக் கொள்வர். ஆனால் உண்மை நிலை அதுவா என்று பார்த்தால், இல்லை என்று தெரிகிறது.

சென்ற தடவை சுயேச்சையாக நின்று நகரசபைத் தேர்தலில் வெற்றியடைந்தவர்களும், நகர மக்கள் கூட்டணியில் நின்று காங்கிரசை முறியடித்தவர்களையும், இந்தத் தடவை காங்கிரஸ் தன் வலைக்குள் வீழ்த்தி அவர்கள் மூலமாக தான் பிடித்த இடங்களின் எண்ணிக்கையை அதிகமாகக் காட்டியுள்ளது. கூர்ந்து பார்ப்பவர்களுக்கு இந்தத் தடவை காங்கிரஸ் அதிகப்படியாகப் பெற்றுள்ள 9 இடங்கள், மேற்கூறிய "ஆள் இழுப்பு" முறையினலாகும் என்று புலனாகாமல் போகாது.

காங்கிரசின் இந்த ஆள் இழுப்பு முறைக்குப் பலியான முன்னாள் சுயேச்சை வாதிகள்—அல்ல, அல்ல; காங்கிரஸ் எதிர்ப்பாளர்களில் சிலர் — தங்களுடைய சுய லாபத்தைக் கருதியும், பதவி வேட்டையில் நாட்டம் கொண்டும் காங்கிரசில் போய்ச் சேர்ந்தனரேயல்லாமல், வேறு விசேஷத்திற்காக அல்ல என்பதும் விபரமறிந்தோருக்குத் தெரியாமற்போகாது. காங்கிரசின் இந்த வலைவீசி ஆள்பிடிக்கும் தேர்தல் கலையினால், பழைய காங்கிரஸ்காரர்கள் சில இடங்களில் புது காங்கிரஸ்காரர்களை எதிர்த்து போட்டியிட்டு, தங்களது பதவி வெறியையும் அதே சமயத்தில் காங்கிரஸ் தலைமையின் கேவலப் போக்கினையும் வெளிப்படுத்தினர்.

இப்படி ஆள் சேர்க்கும் இம்முறையானது சென்ற பொதுத் தேர்தலில் காங்கிரசால் கடைப்பிடிக்கப்பட்டு அடுத்து வந்த ஜில்லா போர்டு முனிசிபல் தேர்தல்களிலும் தொடர்கதையாகப் [illegible] விருந்தே காங்கிரஸ் கட்சியினுடைய பலவீனம் எப்படிப்பட்டது என்பதற்கு ஓர் படப்பிடிப்பாக உதவும்.

தங்கள் கட்சி பலவீனத்தை நன்கு தெரிந்துகொண்ட உள்ளூர் காங்கிரஸ்காரர்கள் சில இடங்களில் நகரசபைத் தேர்தலை ஒட்டி நடத்தப்பட்ட காங்கிரசல்லாதாரின் ஊர்வலத்தின்மீது சோடா புட்டியை விளையாடவிட்டு தங்களது விவேகத்தையும் வீரத்தையும்(!) நிலைநாட்டினர். கத்திக்குத்து போன்ற காட்டு முறைகளினல் தங்களது கட்சியின் சக்தியை வரையறுத்துக் காட்டினர்.

உண்மையிலேயே தன் கட்சியின் பலக் குறைவை எடைபோட்டறிந்து கொண்ட திரு காமராசர் அவர்கள், சென்ற நகரசபைத் தேர்தலில் தான், தமிழ்நாடு காங்கிரசின் தலைவராக இருந்து உழைத்தவர்— இப்பொழுது முதலமைச்சராக இருந்து இந்த நகரசபைத் தேர்தலில் யாரும் பணியாற்றாத அளவிற்கு பணியாற்றி இருக்கிறார். அவருடைய இந்தக் கட்சிப் பணியை பத்திரிகை நிருபர்கள் சுட்டிக்காட்டி 'தேர்தல் பிரச்சாரத்தில் முதலமைச்சர் இறங்கலாமா'? என்று கேட்டதற்கு, தனக்கு அதுதவிர வேறு வேலை கிடையாது என்று பச்சையாகக் கூறி தனது கட்சிக்கு செல்வாக்குத் தேடும் முறையில் பிரச்சாரம் செய்திருக்கிறார். திரு கக்கன் செய்யலாம் அந்த வேலையை; அது அவர் கடமையுங்கூட—செய்தும் இருக்கிறார். ஆனால் காமராசர் — முதலமைச்சராக இருக்கக் கூடியவர் — எல்லோருக்கும் பொதுவானவர்—கட்சி மாச்சரியம் கொண்டு காங்கிரசின் வெற்றிக்காக காரியமாற்றி இருக்கிறார், தனது சக மந்திரிகளோடு. இது தேவைதானா? காங்கிரஸ்காரர்களுக்குத்தான் வெளிச்சம்!

இவ்வளவு தீவிரமாக சோடாபாட்டில்களும், கத்திகளும், காசுகளும், காமராசர்களும் கக்கன்களும் வேலை செய்தும் கூட காங்கிரசுக்குக் கிடைத்த வாக்குகள் 1,28,432 தான். இதில் திருட்டு ஓட்டுகளே அதிகம் இருக்கும் என்று காங்கிரஸ்காரர்களின் தில்லுமல்லுகளை நன்குணர்ந்தோர் அறிவர். இடம் மாறிப் போனவர்களின் வாக்குகளை காங்கிரஸ்காரர்கள் கூலிப் பட்டாளங்கள் உதவி கொண்டு நிரப்பினது ஒன்றே இதற்குப் போதுமான உதாரணமாகும். ஒருவனைக் கொண்டே பல ஓட்டுகள் போடுகின்ற தேர்தல் வித்தையிலே காங்கிரஸ்காரர்கள் கைதேர்ந்தவர்கள் என்று பேரெடுத்திருக்கின்றனர். ஆனாலும் காங்கிரசுக்கு எதிர்ப்பாக கிடைத்துள்ள வாக்குகள் 1,71,468 ஆகும்

சென்னை மக்களுடைய இந்த காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சியை போட்டியிட்டவர்கள் சரியான முறையில் பயன்படுத்தத் தவறினர் என்பதை பல இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் காங்கிரசை எதிர்த்து நின்றதிலிருந்தே அறியலாம். காங்கிரசினுடைய வெற்றிக்கு இது ஒரு காரணமாகிவிட்டது. தேர்தலில் போட்டியிட்டவர்கள் கட்டுக்கோப்பான முறையில் இந்த காங்கிரஸ் எதிர்ப்பு சக்தியைப் பயன்படுத்தியிருப்பார்களானால் உண்மையில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்திருக்கும் என்று எடுத்துக்காட்ட வேண்டியதில்லை.

சென்னையில் முதல் தடவையாக புகுத்தப்பட்ட ஓட்டளிக்கும் புது முறையானது 16,865 வாக்காளர்களை பயனில்லாமல் செய்துவிட்ட குற்றத்தைத்தவிர வேறு ஒன்றும் விசேஷமாகச் செய்துவிடவில்லை. முன்பிருந்த முறையை விட ஓரளவிற்கு இப்புது முறை சுமாராகவும், ஊழல்கள் அதிகமில்லாமல் தடுக்கக்கூடியதாகவும் அமைந்துள்ளது. நல்ல முறையில் இந்த ஓட்டளிக்கும் முறையை விளக்கிப் பிரச்சாரம் செய்திருந்தால், வேண்டுமென்றே வாக்குச் சீட்டில் ஆங்கிலத்திலும், தமிழிலும் விருப்பமானவைகள் வரையப் பட்டும் "வாழ்க" "வெற்றி" போன்ற சுலோகங்கள் எழுதப்பட்டும் இருந்தவைகளைத் தவிர மற்றவைகள் செல்லுபடியாகாமல் போன நிலையைத் தடுத்திருக்கலாம்.

நடைபெற்ற நகரசபைத் தேர்தல் பொதுவாக மந்தமாகவே இருந்தது. 4,85,966 வாக்காளர்கள் இத்தேர்தலில் கலந்துகொள்ளவில்லை. இது சென்னை நகர மக்களின் ஜனநாயக உணர்ச்சியற்ற போக்கினை சுட்டிக்காட்டுகிறதா? அல்லது காங்கிரஸ்காரர்களின் கொள்ளைகளையும், கொடுமைகளையும், ஊழல்களையும், ஊராளும் தன்மைகளையும் கண்டு மனம் வெதும்பிவிட்டதின் எதிரொலியா இவ்வளவு பேரின் பகிஷ்கரிப்பு?–என்று தெரியவில்லை. ஆனால், எது எப்படி இருந்தபோதிலும் இந்நிலை காங்கிரசுக்கு ஆக்கம் தேடத்தான் உதவியதே தவிர, காங்கிரசை ஒழிக்க உதவவில்லை என்பதை நாடறிய வேண்டும்.

இந்தத் தடவை காங்கிரசை எதிர்க்க எந்த முன்னணியும் அமைக்கப்படவில்லை என்பது நினைவு கூறத் தக்கது.

சென்ற தடவை நகரமக்கள் கூட்டணியை அமைக்க மும்முரமாக முயற்சித்த கம்யூனிஸ்டுகளை இன்று காணோம். வெகு ஜனசக்தியைத் திரட்டி பொதுஜன விரோதியாகிய காங்கிரசை ஒழிக்க ஒரு கூட்டணி முன்பு அவர்களுக்கு தேவைப்பட்டது. இன்று அத்தேவைக்கு இடமில்லாமல்காங்கிரஸ் கல்லறைக்குச் சென்றுவிட்டதா என்றால் இல்லை. இன்னும் சொல்லப்போனால் சென்ற தடவையைவிட தற்பொழுது காங்கிரஸ் தனது அந்தியகால அரசியல் தந்திரத்தால் ஒன்பது இடங்களை அதிகமாகப் பெற்றிருக்கிறது. அப்படியிருக்கும்போது கம்யூனிஸ்ட்கட்சி ஏன் இத்தேர்தலில் கூட்டணி முயற்சியில் ஈடுபடாமல் வாளாயிருந்துவிட்டது? ஒருவேளை அவர்கள் எதிரிகளை குற்றம் சாட்டும்பொழுது, 'பிற்போக்கு சக்திக்கு மறைமுகமான ஆதரவு தருகிறார்கள்' என்று சொல்லுவார்களே, அதுபோல் ஏதாவது மறைமுகமான ஆதரவு தந்துவிட்டார்களா? அல்லது எந்த அணி அமைத்தாலும் அதில் தன்னாதிக்கம் இருக்க வேண்டுமென்று நினைக்கின்ற தங்கள் போக்கைக்கண்டு மற்றவர்கள் விழித்துக் கொண்டார்கள் என்று தெரிந்து கொண்டார்களா? ஒருக்கால் கம்யூனிஸ்டுகள் தற்போது தாங்கள் அடைந்துள்ள செல்வாக்கை(!)தாங்களே கணக்கிட்டு கூட்டணி போன்ற வார்த்தைகளை வெளியே சொன்னால் மற்றவர்கள் கலந்து கொள்ளமாட்டார்கள் என்று சும்மாயிருந்து விட்டார்களா? விபரம் ஏதும் தெரியவில்லை.

ஆனால், ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது. கம்யூனிஸ்டுகள் இத் தேர்தலில் அதிக

★ தொடர்ச்சி 8-ம் பக்கம்

— இளம்பரிதி —





# தலையங்கம்

காதலிலே கவிதையிலே களம் போதும் பேச்சு;
கணவனுக்கும் மனைவிக்கும் திராவிடமே மூச்சு.

சென்னை 7—10—55 வெள்ளி

## குதிரை ஏறுகிறார்கள் !

'இந்தியாவின் மாணிக்க'த்தை இரதத்திலே ஏற்றி வைத்து தூசுபடாமல் அவரைத் தென்னாட்டிலே பவனி வரச் செய்தார; பக்கத்திலேயே இருந்து பணிவிடைகள் புரிந்து பரவசத்திலாழ்த்தினர் விருதை வீரர் காமராசர்.

மலர்மாரி; பூரண கும்பம்; மின் விளக்கு அலங்காரம்; மேளம்; தாளம்; கானம்—இவை யாவும் அவர் பெற்ற வரவேற்பின் முக்கிய கட்டங்கள்!

மின்வேகச் சுற்றுப் பயணம் !

கண் கொள்ளாக் காட்சி!

எண்ணற்றோர் கூட்டம்!

—மண்ணுள்வோர் கையாண்ட வர்ணிப்புக் காட்சிகள் இவை!

"அறுபது வயதைத் தாண்டியவரா? அரும்பு மீசைப் பருவத்தவர் போல் அசையாமல் நிற்கின்றாரே!"—இந்தப் பேச்சுகளைக் கேட்டு, களித்து, கண்ணீர் மல்கி, கனலிடை மெழுகாய் மெய்யுருகிய உண்மை தேசிய பக்தர்களைச் சென்ற வாரம் சந்தித்தோம்!

நேரு வளர்ந்து ஆளான அலகாபாத்தில்கூட இவ்வளவு ஆரவாரம் அவருக்கு இருந்ததில்லையே-என்று யாரும் சொன்னால்கூட நாம் ஆச்சரியப் பட்டிருக்க மாட்டோம்; அவ்வளவு உற்சாகத்தை அவர் இங்கே பெற்றிருக்கிறார்; பெற வைத்திருக்கிறது அவர்கள் கையிலே இருக்கும் ஆட்சிக் கோல்; அவர்கள் நெஞ்சிலே இருக்கும் வடநாட்டு பக்தி!

காமராசர் பச்சைத் தமிழர்; டெல்லிக்குப் 'பராக்கு' பாடும் பயந்த சுபாவம் கொண்டவர்தான் !

அவர்தான் பம்பாய்க்குச் சென்றிருந்தார்.

அங்கே அவருக்குப் படாடோபமான வரவேற்பு உண்டா? தமிழர்களைப் பரவசப் படுத்தும் விதத்தில் பம்பாயின் பெருந்தலைகளாவது வரவேற்பு வைபவம் நடத்தியதா ?—இல்லை.

இந்தியாவின் முதல்வருக்கு இங்கு தரப்பட்ட தனிப்பெரும் வரவேற்பில் ஆயிரத்துள் ஒரு பங்காவது சென்னையின் முதல்வருக்குத் தரப்பட்டதா?—அதுவும் இல்லை.

பம்பாயிலே வசிக்கும் தென்னாட்டுக்காரர்கள்தான் அவருக்கு நடைபாவாடை விரித்து நலம் விழைந்தனர்.

காமராசரை மட்டுமல்ல; மாஜி கவர்னர் ஜெனரலைக்கூட அவர்கள் மதிப்பதில்லை.

—இது நாம் சொல்வதல்ல; சென்றவார 'கல்கி' இதழில் 'வடநாட்டு யாத்திரை—10' என்னும் பகுதியிலே பகீரதன் என்பவர் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார் :

"வடநாட்டுத் தலைவர்களைத் தமிழ் நாட்டில் கொண்டாடுவது போலத் தமிழ் நாட்டுத் தலைவர்களை வடநாட்டில் அவ்வளவாகக் கொண்டாடுவதில்லை. நான் வடநாட்டில் சுற்றிப் பார்த்த இடங்களில் எல்லாம் நம் தமிழ்நாட்டுத் தலைவர்களின் படங்களையே காணவில்லை. அதைப் பற்றி மனதுக்குள்ளாகவே வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். சிலரிடம் வாய்விட்டும் சொல்லிக் கொண்டு வந்தேன்."

—கல்கி கூடாரத்தில் இருப்பவர் கண்ணீர் விடும் அளவுக்கு வடநாட்டுக்காரர்கள் வரட்டு மனப்பான்மை கொண்டவர்களாய் இருந்திருக்கிறார்கள்.

பகீரதன் இன்னும் எழுதுகிறார். "இந்தச் சமயத்தில் வன ஆராய்ச்சிக் கழக விருந்தினர் வரவேற்புக் கூடத்தில் ராஜாஜி அவர்களின் படத்தைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட பெருமை சொல்லி முடியாது.

"எல்லாப் பத்திரிகை நிருபர்களுமே நான் சொல்லுவதை அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். 'நீர் சொல்லுவது ரொம்ப சரி. இந்தப் பக்கத்தில் தென்னாட்டுத் தலைவர்கள் யாரும் நல்லமுறையில் கௌரவப் படுத்தப்படவில்லைதான்.'—என்று சொன்னார்கள்.

"ராஜாஜி அவர்கள் படம் அங்கு மாட்டியிருக்கும் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டிருந்தபோது ஒரு உண்மை தெரிந்தது. வன ஆராய்ச்சிக் கழகத்தில் இருந்த ஒரு தமிழ் நாட்டு அதிகாரியின் முயற்சியால் ராஜாஜி அவர்களின் திருஉருவப் படம் அங்கு மாட்டப் பட்டிருப்பதை அறிந்து அவருக்கு மனதுக்குள் நன்றி தெரிவித்துக் கொண்டேன்."

—அழுகுரலிடையே ஒரு ஆனந்தம்! ஆச்சாரியார் படம் மாட்டப்பட்டிருந்ததாம்—அதையும் ஒரு தமிழ் நாட்டுக்காரர்தான் ஏற்பாடு செய்துவிட்டுப் போனாராம்! வேதனையாக இருக்கிறது நமக்கு. பார்ப்பனர்களையும் மதிப்பதில்லையாம் பனியாக் கூட்டம்!

வடநாட்டிலிருந்து துரும்பு வந்தாலும் அதற்குத் தூப தீப நெய்வேத்தியங்கள் செய்து; துந்துபி முழக்கி; வெள்ளிப் பேழையிலே வரவேற்பு சிந்துபாடித் தருகிறோம். ஆனால் அவர்களோ தென்னாட்டுக்காரர்களை 'வா' வென்று அழைப்பதுமில்லை; அவர்களை வரவழைத்து திருவிழா நடத்துவதுமில்லை!

அவர்கள் உதைக்கிறார்கள்; இங்கு இருப்போர் அந்தக் காலை கண்ணிலே ஒற்றிக் களிப்படைகிறார்கள்!

அவர்கள் அலட்சியப்படுத்துகிறார்கள்; இவர்களோ ஆலவட்டம் சுழற்றுகிறார்கள்!

இவர்கள் குனிகிறார்கள்; அவர்கள் குதிரை ஏறுகிறார்கள்!

இந்த அடிமை மனப்பான்மை— பாத தூசிக்குத் தோத்திரம் பாடும் பூஜாமனோபாவம் ஒழியவேண்டும். வடக்கே காவடி தூக்கித் திரிவோர் வளைந்து போன முதுகைச் சற்றே நிமிர்த்தட்டும்: ஃ

## வானொலியில்- வீண் ஒலியா ?

தேமதுரத் தமிழோசை திசையெட்டும் பரவச் செய்ய புத்தகங்கள்; மேடைகள்; இவைகளோடு வானொலியும் தக்க துணை புரிய வேண்டும்.

வானொலி ஒரு நாட்டின் கலாச்சாரக் கண்ணாடி.

இசையின் எழில் கூறும் ஏற்றமிகு சாதனம்.

கலை வளரும் பீடம்—ஆனால் இந்தமிழ் நாட்டிலோ அவை கொலை செய்யப் படுவதைப் பார்க்கிறோம். அம்மாமிகளின் அழுகுரல் வானொலியைத் திருகியதும் நம் காதுகளைக் குடைகிறது. இப்போது அதுவும் போதாதென்று தவலைகளைக் கொணர்ந்து வரட்டோசை கிளப்பச் செய்யப் போகிறார்களாம்.

ஆமாம்; அகில இந்திய ரேடியோவில் வேதங்களை ஒலிப்பதிவு செய்து 'ரிக்கார்ட்' செய்யப்படுவதற்கான ஏற்பாடுகள் நடைபெறுகின்றனவாம். இதற்காக காசிப் பார்ப்பனர்கள் சிலர் அழைக்கப் பட்டிருக்கின்றனராம். துவக்கத்தில் ரிக் வேதமும், சாம வேதமும் ஒலி பரப்பப் படுமாம்!

சரியான உச்சரிப்பு மறந்து விட்டதாம் இங்குள்ள உஞ்சிவிருத்திகளுக்கு; அதைச் சரிப் படுத்துவதற்காகத்தான் காசியிலிருந்து சனாதனிகள் வருகின்றனராம்.

வேத பாராயணப் பள்ளியாக மாறப் போகிறது வானொலி நிலையம்.

"மாறப் போகிறதா? இப்போது மட்டும் என்ன வாழ்கிறது?" என்று கேட்கலாம், சிலர்.

ஆமாம் ; தமிழ்க் கொலைதான் நடைபெறுகிறது, தண்டமிழ்ப் பூங்காவாக இருக்க வேண்டிய வானொலி நிலையத்தில்!

நமஸ்தே
ஸ்வாகதம்
கீதமாலிகா

—இவைகளுக் கெல்லாம் தமிழ் வார்த்தைகள் கிடைக்கவில்லையாம் தமிழ் நாட்டு வானொலி நிலையங்களுக்கு!

வெட்கமா யிருக்கிறது, நமக்கு! கடல் கடந்த இலங்கை வானொலியில் 'வணக்கம்' என்ற தமிழ்ச் சொல் கேட்கிறது; தமிழகத்து வானொலி நிலையங்கள் அதைத் தடை செய்து விட்டன.

இந்த நிலையில்தான் சவுண்டிகளுக்குப் பயிற்சி தரப் போகிறார்களாம் காந்தி பக்தர்கள்! தமிழர்களின் கிளர்ச்சிக்குப் பிறகுதான் வானொலி நிலையத்தவர்ன் போக்கு மாறுமோ, என்னவோ!

# நேரு— கதம்பம்!

"நான் திருச்சி, சேலம், கும்ப கோணம், தஞ்சை போன்ற இடங்களுக்கு வந்து இருபது வருஷங்கள் ஆகின்றன!"

—நேரு

ஆமாம்; அந்த இடை நேரத்தில்தான் திருச்சிக்குப் பக்கத்திலேயுள்ள கல்லக்குடியிலே பிணமலைகள் குவிக்கப்பட்டன. சேலத்து சிறைச்சாலை சுவருக்குள்ளே நிராயுதபாணிகளான கைதிகளைக் கொன்று, அந்த இரத்த வெள்ளத்திலே அசோகனின் தர்மச் சக்கரத்தைக் குளிப்பாட்டினார்கள். குடந்தையின் தெருக்களிலே வாய்ப்பூட்டுச் சட்டத்துக்கு வாய்க்கரிசி போடவந்த வீரர்கள் மீது இரும்புத் தடிகளை ஏவி விட்டார்கள், ரமணரிஷி பக்தர்கள்! தஞ்சையிலே புயல்—பஞ்சைகளாய் சோழ நாட்டுச் செல்வங்கள்! அதைப் பார்க்க மறுத்துத்தான் மலையாளத்து உப்பங்கழிகளிலே ஊர் சுற்றினீர்!—இத்தனை காயங்களும் இருபது வருஷங்களுள் ஆறிவிடுமா, என்ன?

★

"மலிவான புத்தகங்களை ஏராளமாக வெளியிட இந்திய சர்க்கார் திட்டம் தீட்டியிருக்கிறது"

—சென்னையில் நேரு

தயவுசெய்து நீங்கள் எழுதிய 'உலக சரித்திரத்'தை மட்டும் வெளியிட்டு விடாதீர்கள். ஏனெனில் பாமர மக்கள் பெருவாரியான அளவில் படிப்பார்களேயானால், உங்கள் எழுத்தையும் செயலையும் ஒப்பிடத் துவங்கி விடுவார்கள்; பின்னர் நீங்கள் ஓட வேண்டியிருக்கும்!

★

"தேசியக் கொடி எரிக்கிறவர்கள் என் முன்னால் வரட்டும், நான் அவர்களை ஒரு கை பார்க்கிறேன்!"

—வேலூரில் நேரு.

அய்யா, காந்திசீடரே! கொஞ்சம் பொறும். பாட்னாவிலே கொதிப்படைந்த மாணவர்கள் தேசியக் கொடிக்கு தீ வைத்தார்களே; அப்போது முடவனாகவா இருந்தீர்? அல்லது புல்கானினுடன் கை குலுக்கிய பிறகு இதயத்தை மாஸ்கோவில் விட்டு வந்தது போல் கைகளையும் அங்கேயே வைத்துவிட்டு வந்து விட்டீரா?

★

'தமிழ் நாடு ஒழுக்கத்துடனும், கட்டுப்பாட்டுடனும் இருக்கிறது'

—நேரு

நினைவிருக்கட்டும்! சாது மிரண்டால் காடு கொள்ளாது!

★

"வடநாட்டு உச்சியிலிருந்து, தெற்கே குமரிமுனை வரை இந்தியா ஒரே நாடு தான்; என்ன நேர்ந்தாலும், எவர் என்ன செய்தாலும், இந்த இந்தியா ஒன்ருகவேதான்—ஒரே நாடகவேதான் இருக்கும்!"

—வேலூரில் நேரு.

அயர்லாந்தையும் சேர்த்து வைத்துக்கொண்டு 'ஒரே நாடு' கோஷமிட்ட 'கிரேட் பிரிட்டன்' இன்று 'சின்ன பிரிட்டன்' ஆகி விட்டது. பிரிக்க அனுமதிக்க மாட்டோம் என்று கூறை மீதேறி நின்று பிரச்சாரம் செய்தீர்களே, அந்த பாகிஸ்தான் தனித்து வாழ்கிறது. வெள்ளையன் இதே பதிலைத்தான் முன்பு கூறினன்! ஜின்னவுக்கு இதே பதிலைத்தான் நீங்கள் கூறினீர்கள். அதையே திருப்பிச் சொல்கிறீர்கள்—இதில் ஆச்சரியமொன்றுமில்லையே!

★

"என் திரேகம் வலியெடுக்கும் அளவுக்கு சரமாரியாக பூமாரி பொழியாதீர்கள்!"

—காஞ்சியில் நேரு.

பொதுமக்கள்மீது துப்பாக்கித் தோட்டாக்களை சரமாரியாகப் பொழிகிறீர்களே, சிறிது நேரம் இந்த மலர்மாரியைக் கூடவா உங்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை!

★

## காலம் மாறினல்....

★

இரும்பு நெஞ்சம்; பகைவரைத் துரும்பென நினைக்கும் உடும்புக் கொள்கை!

—இவை விடுதலை வீரனின் இலக்கணம்.

சிறையிலே வாழ்வான்—சிந்தனைச் சுதந்திரம் அவன் இதயத்தின் வசமிருக்கும்!

—பின்னர் காலம் மாறும்! காராக்கிரக வாழ்க்கை நாட்டுக் காவலன் வாழ்க்கையாக மாறும்; விடுதலை மணம் பெறும்.

மகாவீர் தியாகி இன்றைய பாதுகாப்பு அமைச்சர், உரிமை பறிக்கும் தேசியத்தார் அரசாங்கத்தில்! அன்றோ அவர் நாடு சுற்றி வெள்ளை ஆதிபத்யக்காரர் பயிர் செய்த கேடு களையும் விடுதலைப் போர் வீரனுக இருந்தார்.

1942-ம் ஆண்டு அது! சுதந்திர இயக்கத்தில் சம்மந்தப்பட்டமைக்காக கெர் என்னும் வெள்ளை அதிகாரியால் மகாவீர் தியாகிக்குக் கடுங்காவல் தண்டனைத் தரப்பட்டது.

இப்போது தியாகியார் தியாகத் தழும்புகளைத் தடவியபடியே இங்கிலாந்து சென்ருர். அப்போது கெர் துரையிடமிருந்து அழைப்பு வந்ததாம் விருந்துண்டு செல்வதற்காக.

யாருடைய உத்தரவுகள் இவரது கைகளில் இரும்புக் காப்பு மாட்டியதோ, அதே கைகள் அறுசுவை உண்டி தர, அதை உண்டு மகிழ்ந்திருக்கிருர் மகாவீர் தியாகி!

காலம் மாறிவிட்டது!

வேம்பாகக் கசந்தவர்கள் கரும்பாக இனிக்கிருர்கள்!

கூட்டிலடைத்தவர்கள் கொஞ்சி மகிழ்கிருர்கள்!

கைதிகளாய் இருந்தவர்கள் காவலர்களாய் இருக்கிருர்கள்!

உரிமை முழக்கம் கிளப்பியவர்கள் வாழ்நாள் முழுவதும் வாய்க்கிழியக் கத்திக்கொண்டே இருக்க வேண்டியதில்லை; வாய்மை வென்றுதான் தீரும்! தினையும் பனையாகும்; பூனையும் யானையாகும்—இதைத்தான் தியாகி பெற்ற விருந்து சுட்டிக்காட்டுகிறது!

★ ★ ★

## அச்சு வேலை அகராதி!

| அச்சாபீஸ்காரர் சொல்வது: | அதன் உண்மைப் பொருள்: |
|---|---|
| 'உங்கள் வேலை தான் நடந்து கொண்டிருக்கிறது, மசி உலரவில்லை இன்னும்.' | 'உங்கள் வேலையை எடுத்துக்கொள்ள இன்னும் ஒழியவே இல்லையே!" |
| 'மெஷினில் ஓடிக்கொண்டிருக்கிறது.' | "கட்டாயம் அடுத்த புதன் கிழமை உங்கள் வேலையை எடுத்துக் கொள்வோம்,' |
| 'ஓரம் வெட்டுகிருேம்.' | 'கையிலிருப்பது முடிந்ததும் அடுத்தது உங்கள் வேலைதான்.' |
| 'வண்டியில் ஏற்றி அனுப்பி விட்டோமே!' | 'இன்று நிச்சயம் அச்சடிக்கப் போகிருேம்.' |
| 'பையன் எடுத்து வருகிருன். அவன் டவுனுக்குப் போயிருப்பதால் வர நேரமாகலாம்.' | 'காலை அநேகமாக உங்கள் வேலையை முடித்துத் தந்து விடுவோம்.' |

—'மஞ்சரி'



# பெட்டி இங்கே! எஞ்சின் அங்கே!

பெரம்பூர் ரயில் பெட்டி தொழிற்சாலையைத் திறந்து வைக்கவும்—தமிழகத்து நகரங்களிலே நடைபெற இருக்கிற நகரசபைத் தேர்தல்களில் காங்கிரசுக்கு நாடி முறுக்கேற்றவும் — கோகிலவாணியின் இசை கேட்டு மகிழவும்—சென்னை வந்தார் நேரு துரைமகனர்.

ரஷ்யாவிலே ராஜோபசாரம் பெற்று; புல்கானினுக்கு பஞ்சசீல புத்திமதிகளை வழங்கிவிட்டு; மார்ஷல் டிட்டோவின் மதிப்புக்கும் பாத்திரமாகி—அங்கங்கே விருந்து சாப்பிட்டதையும்—வேடிக்கை பார்த்ததையும் பாமரர்கள் மயங்குமளவுக்குச் சிறப்பான முறையில் சினிமாப் படமெடுத்து; கொட்டு முழக்கத்தோடு ஊரெல்லாம் காட்டிவிட்டு; அந்த அஸ்திவாரத்திலே நேரு என்னும் பிரச்சார பீரங்கியை நிறுத்தி வைத்து-கேவலம்; நகரசபைத் தேர்தல் வேட்டையாடி யிருக்கிருர் காமராசர்.

இருபது வருஷங்களுக்குப் பின் வருகிருராம்! — சென்னை முதல்வர் சுற்றும் சாமரவீச்சு இது! உண்மையை சொல்லப் போனல் இப்போது தென்னட்டிற்குப் படையெடுத்திருப்பது இந்தியாவின் பிரதமர் நேருவல்ல; காங்கிரசின் கதிரவன் நேருவுமல்ல; இந்தியச் செய்திப் படங்களின் தன்னிகரற்ற கதாநாயகன் நேருதான் இப்போது வந்திருப்பவர்!

அந்த 'நியூஸ் ரெவ்யூ'வின் 'ஹீரோ'தான் பெரம்பூர் ரயில் பெட்டி உற்பத்தி சாலை துவக்க விழாவிலே குறிப்பிட்டாராம்;

"இந்த தொழிற்சாலையில் தயாராகும் பெட்டிகள் முழுவதும் உருக்கினலான முழு இணைப்புப் பெட்டிகள். அதேபோல இந்திய நாட்டு மக்கள் அனைவரும் ஒன்ருக இணைந்து வாழ வேண்டும்!"—என்பதாக!

"ரயில் பெட்டிகளின் இணைப்பு நாட்டின் இணைப்புக்கு அடையாளம்; சின்னம்" என்றும் கவிதா நடையிலே கர்ஜனை புரிந்திருக்கிருர்.

ரயில் வண்டியை உதாரணத்துக்கு அழைத்தவர் தான் 'ஏக இந்திய தத்துவத்'தைப் பற்றி திருச்சியிலே இப்படிப் பேசியிருக்கிருர்:

"நம்முடைய நாடு பரந்து விரிந்து, வடக்கே இமயமலை முதல் தெற்கே கன்யாகுமரி வரை படர்ந்துள்ளது. நான் இமய மலையிலிருந்து வருகிறேன். அங்குதான் நான் பிறந்து வளர்ந்தேன். அது எனக்குச் சொந்தமானது. ஆனல் இமாலயம் உங்களுக்கும் சொந்தம். அது நம்முடைய பொது பாரம்பரியச்சொத்து. அதேபோல் தென்னிந்தியாவிலும் எனக்குப் பங்குஇருக்கிறது. வடக்கில் உள்ள இமயத்தை நீங்கள் சொந்தம் பாராட்டுவதைப் போல், தென் ராஜ்யத்தையும் என் பாரம்பரிய சொத்தாக நான் கருதுகிறேன். காரணம் இந்தியா முழுவதும் எல்லா இந்தியர்களின் பொதுச் சொத்து."

—இமயத்தையும், குமரி முனையையும் 'இந்தியர்களி'ன் சொத்தாக்கி 'ஏக பாரதப்' பாசுரம் பாடுகிருர் பண்டிதர்.

பெரம்பூரிலே குறிப்பிட்டார் ரெயில் பெட்டிகளின் இணைப்பு நாட்டின் இணைப்புக்கு ஒத்திருப்பதாக! திருச்சியிலே இந்த உவமைக்கு பதவுரை வழங்கி விரித்துக் காட்டுகிருர் இமயமும், குமரியும் ஒன்றுதான் என்று!

இந்திய உபகண்டத்திலே மொழிவழி மாகாணங்கள் அமைய வேண்டும் என்ற கிளர்ச்சிக்கு அவரை அறியாமலே நல்ல உதாரணத்துடன் ஆதரவு கொடுத்திருக்கிருர் என்று தான் மக்கள் பேசிக் கொள்கிருர்கள் மொழிவழியாக மாகாணங்களைப் பிரிக்க வேண்டும் என்று கிளர்ச்சி நடத்துகிறவர்களுக்கு நேருவின் இந்த உதாரணம் நன்கு பயன்படும் என்பதை யாரும் மறுக்க முடியாது. ரயில் பெட்டிகள் தனித் தனியாக அமைக்கப்பட்டு ஒன்றை யொன்று இணைக்கும் இரும்புக் கொக்கிகள் பொருத்தப்பட்டால்தான் ஒழுங்காக நகர இயலும். இரும்புக் கொக்கிகளும் இல்லாமல்-பெட்டிகளும் தனித்தனியே செய்யப்படாமல் ஒரே நீளத்திற்குக் கட்டப்பட்டால் அது எள்ளிநகையாடுதற்குரிய ஒரு முயற்சியாகவே போய்விடும். அதனல்தான் மொழிவாரி மாகாணப் போராட்டக்காரர்கள் அந்தந்த மொழிகளுக்கென தனித்தனி அரசு அமைத்து அந்த அரசுகளை இணைத்து ரயிலைப்போல் ஆக்க வேண்டும் என்று வலியுறுத்தி வருகிருர்கள். ஆனல் பெரம்பூரில் பெட்டிகளின் இணைப்பையும். நாட்டின் இணைப்பையும் ஒன்று சேர்த்துப் பேசிய பிரதமர் நேரு அவர்கள் மொழிவழி மாகாண அமைப்பில்மட்டும் தனது உதாரணத்திற்கு இதுவரையில் முக்கியத்துவம் தரவில்லை. பொட்டி ஸ்ரீராமுலு தன் உயிரைப் பணயம் வைக்க நேர்ந்தது. திருகொச்சி தமிழ்ப் பகுதிகளிலே—திருத்தணி முதலிய இடங்களிலே அடக்குமுறைக்கு மக்கள் ஆளாக நேர்ந்தது.

"ரயில் பெட்டிகளின் இணைப்பு நாட்டின் இணைப்புக்கு அடையாளம்; சின்னம்!"

இவ்வளவு கொடுமைகளுக்கும் காரணமாக இருந்த சர்க்காரின் பிரதமர் பேசுகிருர்; பெட்டிகளின் இணைப்பு போல நாட்டு இணைப்பும் இருக்க வேண்டுமென்று! எவ்வளவு தாமதமாக வருகிறது தகுதியான உதாரணம் என்று தமிழரசுக் கழகத்தினர் கருதுகிருர்கள், நேருவின் பேச்சு கேட்டு! ஆனல் நாமோ—அதில் சிறிது முரண்பாடுடையவர்கள் என்பதை சுட்டிக் காட்டித் தீர வேண்டிய நிலையில் இருக்கிருேம்.

தனித் தனியான ரயில் பெட்டிகள் பல, ஒவ்வொன்றுடனும் இணைக்கப்பட்ட அமைப்புதான் ரயில் என்பது சிறு குழந்தைக்கும் தெரிந்த உண்மை!

அந்த ரயில் வண்டியிலே 'ஏர் கண்டிஷன்' சாதனம் உள்ள முதல் வகுப்புப் பெட்டிகள் இருப்பதையும்; மெத்தையும், மென் சுகமும் கொண்ட இரண்டாம் வகுப்புகள் இருப்பதும்; கடைசியாக முடை நாற்றமும், மூட்டைப் பூச்சிகளும் நெளியும் மூன்ரும் வகுப்புப் பெட்டிகள் அமைந்திருப்பதும் எல்லோருக்கும் தெரியும்—அதுவும் அடிக்கடி வகுப்பு மாற்றங்கள் செய்து துக்ளக் தர்பார் நடத்தும் தேசிய அரசினர் நன்கு உணர்ந்திருப்பர்!

மோதிலால் மைந்தர் குறிப்பிட்ட 'ஏக இந்தியா' ரெயிலில் கடல் அலை போல் தொடர்ச்சி கெடாத ஆலைகளும்; அகண்ட சாலைகளும்; பாலையைச் சோலையாக்கும் பயன் தரு திட்டங்களும் கொண்ட முதல் வகுப்பில் பிரயாணம் செய்யும் உரிமையும், சலுகையும் விந்தியத்துக்கு வடக்கே உள்ளவர்களுக்கு மட்டும் அளிக்கப்பட்டிருக்கிறதே — என்று எண்ணிடும் போதுதான் கண்ணிழந்த நம் நிலையைக் கருதி 'கதியிலையா?' என்று ஓலமிட்டுக் கதற வேண்டியவர்களாகிருேம்.

வடவர்கள் ஏறிச் செல்லும் பெட்டியிலே சிந்திரி போன்ற சுகம் தரும் விசிறிகள்; 'ஏர் கண்டிஷன்' எனப்படும் ஹீராகுட் அணைகள்; பஞ்சணை போன்ற பக்ரா நங்கல்கள்!

தென்னகத்து மக்களாகிய நாம் ஏறிச் செல்லும் மூன்ரும் வகுப்புப் பெட்டியோ மாட்டுத் தொழுவத்தைவிட மோசமானதாய் இருக்கிறது! திருமண நாட்களிலே சேரும் கூட்டத்தைப் போல அன்ருடம் மக்கட் தொகை சேர்ந்து, நிற்பதற்குக்கூட இடமில்லாமல் 'தொத்தி'க் கொண்டு செல்கிருேம்.

—உவமை கூறவந்த பண்டிதர், அந்த உவமைக்கு இப்படியெல்லாம் பொருளுண்டு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். இல்லையேல் பக்கத்திலிருக்கும் காமராசராவது புரியவைக்க வேண்டும். நேருவின் தென்னட்டு விஜயம் இந்த அளவுக்காவது பயன்படுமானல் அது நமக்கும் புளகாங்கிதம் தருவதாக இருக்கும்.

அது மட்டுமோ? நேருவுக்கு முன்னல் பெரம்பூரில் பேசிய ரயில்வே அமைச்சர் லால் பகதூர் சாஸ்திரி நேருவின் உவமையின் உட்பொருளை 'வடநாட்டு ஆதிபத்யம்' என்னும் அகராதியின் துணைகொண்டு விளக்கியிருக்கிருர்.

**"ரயில் பெட்டிகள் இங்கே தயாராகின்றன—ரயில் எஞ்ஜின்கள் வடக்கேயுள்ள சித்தரஞ்சன் தொழிற்சாலையில் தயாராகின்றன"** என்று குறிப்பிட்டிருக்கிருர், சாஸ்திரியார்! அதைத்தான் நாமும் கூறி வருகிருேம். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் என்று மொழிவழியாக மாகாணங்கள் பிரிக்கப்பட்டு—அதாவது நேரு கூறியதுபோல தனித்தனி ரயில் பெட்டிகளாக ஆக்கப்பட்டு-அந்த மொழியரசுகள் ஒரு

★ தொடர்ச்சி 8-ம் பக்கம்

# புதையல்

மு. கருணாநிதி

**சென்ற இதழில்.....**

★ பரிமளாதான் மலையாள பகவதி — என்பதை துரை தெரிந்துகொள்கிருன்.

★ அம்பலம், மேனகாவிடம் புதையல் விரைவில் கிடைக்கப் போகிறது என்பதைத் தெரிவித்து மகிழ்வதோடு, அந்த ரகசியம் தெரிந்தவர்களான— மாயாண்டி, துரை, துக்காராம், மலையாள பகவதி ஆகிய நால்வரையும் கொன்று தீர்த்துவிட வேண்டுமென்றும் திட்டம் போடுகிருர்.

★ தகட்டுக் குறிப்பில் காணப் பட்டதற்கிணங்க, பள்ளிக்கூட வசதிக்காக கிணறு வெட்டுகிருேமென்று கூறி பள்ளிக்கூடத்திற்குப் பக்கத்தில் தோண்டிப் பார்க்கிருர். ஊர் மக்கள் இல்லாத நேரத்தில், வெட்டப்பட்ட கிணற்றை பரிசோதனை செய்வோம் என்று கருதிக் காத்திருக்கிருர்கள், அம்பலமும் மாயாண்டியும்!

★ மேனகாவின் இஷ்டத்திற்கு இணங்குவது போல் நடித்து, துரை, பரிமளா, மேனகா மூவரும் தப்பிவிட யோசனை செய்கிருர்கள்.

**43**

## மேனகா விடுதலை ?

**"எழுவானுக்கும் தொழுவானுக்கும் இடையிலே...**
**காக்கை மூக்கு நிழலிலே...**
**கள்வர் புகும் வழியிலே...**
**கண்டாலும் 'கம்மாளர்' கண்ணிலே...**
**எழுபது கோடி பசும்பொன்..."**

தண்ணீர் எவ்வளவு ஊறியிருக்குமோ—தன் முயற்சிக்குத் தடையாக ஆகிவிடுமோ—என்றெல்லாம் கிணற்றைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கிய அம்பலம், மாயாண்டியுடன் பள்ளிக்கூட வாசலுக்கு வந்து சேர்ந்தார். ஆவலோடு கிணற்றை எட்டிப் பார்த்தார்.

கிணற்றிலே ஊறியிருக்கும் கலங்கிய தண்ணீரிலே அவரால் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியாக மாயாண்டி கிணற்றில் இறங்கிப் பார்ப்பதாக முடிவாயிற்று. அவரது இடுப்பிலே ஒரு கயிறு கட்டப்பட்டு அது மேலேயுள்ள ஒரு மரத் துண்டில் முடிந்து வைக்கப் பட்டது. அம்பலத்தின் உதவியோடு மாயாண்டி கிணற்றுக்குள் இறங்கினுர். மேலிருந்தவாறு அம்பலம், மாயாண்டியின் ஒவ்வொரு அசைவையும் பரபரப்போடு கவனித்துக் கொண்டிருந்தார்.

சிறிது நேரத்திற் கெல்லாம் மாயாண்டி 'வெற்றி! வெற்றி!' என்று கத்தினுர்.

அம்பலம் "ஆகா! அப்படியா!" என்று கிணற்றுக்கு மேலே கூத்தாடினுர்.

மாயாண்டி, கிணற்றிலே இரும்புச் சங்கிலி பிணைக்கப் பட்ட ஒரு பெட்டியிருப்பதாகக் கத்தினுர். உடனே அம்பலம் அதைத் தூக்குவதற்குத் தானும் இறங்க ஆரம்பித்தார்.

உடனே மாயாண்டி, "வேண்டாம்–வேண்டாம்! சிறிய பெட்டிதான்–நானே எடுத்து வருகிறேன்" என்று கூவினுர்.

"இதோ இன்னொரு கயிறு அனுப்புகிறேன்–அதிலே கட்டி விடு! நான் பெட்டியை மேலே இழுத்து விடுகிறேன்" என்றுர் அம்பலம்.

அதற்கு மாயாண்டிக் கிழவர் சிரித்துக் கொண்டே, "ஏன்—பெட்டியைக் கயிறு மூலம் எடுத்துக் கொண்டு, என்னைக் கிணற்றுக்குள் வைத்து மூடி விடலாமென்று உத்தேசமோ? முடியாது; முடியாது; நானே எடுத்து வருகிறேன்!" என்று கிண்டல் செய்தார்.

"அடக் கிழவா! உமது பங்கு உமக்குத் தரப்படும் அய்யா! பயப்படாதீர்!" என்று அம்பலம் தாங்க முடியாத மகிழ்ச்சியோடு குதித்தார். கிழவரும் பெட்டியுடன் கிணற்றுக்கு மேலே வந்து சேர்ந்தார்.

இரும்பாலான கனமான சிறிய பேழை; மெலிந்த சங்கிலியால் இணைக்கப் பட்டிருந்தது. மிகவும் க[illegible]டப்பட்டு அம்பலம் அதைத் திறந்தார். அதற்குள்ளேயும் ஒரு பளபளப்பான தகடு இருப்பதைத்தான் அவர்கள் கண்டார்கள். மாயாண்டிக் கிழவர், "சரிதான் போ!" என்று அலுத்துக் கொண்டு உதட்டைப் பிதுக்கினுர். "புதையலைத் தேடினு ஒரே தகடா கிடைக்குதே" என்று அவர் முணு முணுத்தார்.

அதைக் கண்ட அம்பலம், "அதற்குள் அசந்து விடலாமா? முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்! அதிருக்கட்டும்; இதைப் படிக்கலாம்" என்று தகட்டை மாயாண்டியின் கையிலே கொடுத்தார்.

கிழவரும் அந்த எழுத்துக்களைப் படிப்பதற்கு மிகவும் கஷ்டப்பட்டு, கடைசியிலே ஒருவாறு படிக்க ஆரம்பித்தார். அதிலேயிருந்த வாசகம் இது தான்:

"புதையல் இங்கே இருக்கிறது. திருமணமான தம்பதிகளை திருமணதினத்தன்றே கொலை செய்து, அந்த ரத்தத்தை இந்த இடத்தில் தெளித்தால் புதையல் வெடித்துக் கிளம்பும்."

இதைப் படித்து முடித்ததும் மாயாண்டிக் கிழவர், "அய்யோ–என்ன அக்கிரமம்! தம்பதிகளைக் கொலை செய்ய வேண்டுமா? அப்படிப்பட்ட புதையல் நமக்கு வேண்டவே வேண்டாம்!" என்று அலறினுர்.

"கல்யாணமான உடனே கொலை செய்வதற்குத் தகுந்தபடி தம்பதிகள் எங்கே அய்யா கிடைப்பார்கள்?" என்று அங்கலாய்த்துக் கொண்டார்.

அதைக் கேட்ட கிழவர், "ஓகோ! பலிக்கு ஆட்களைத் தேடவே ஆரம்பித்து விட்டீரா? வெள்ளியம்பலம் சொல்வதைக் கேளும். இவ்வளவு கொடுமையான காரியத்தைச் செய்து இந்தப் புதையலை எடுக்கவேண்டாம். நம் பேராசைக்காக யாரோ இரு பருவ மலர்கள் தங்கள் உயிரை இழப்பதா? கொடுமை! கொடுமை! எனக்குப் புதையலும் வேண்டாம்—ஒண்ணும் வேண்டாம்" என்று உறுதியாக உரைத்தார்.

"நீ ஒரு கோழைக் கிழவனய்யா! கொலை என்றுல் இப்படிப் பயப்படுகிறீரே! கோடீஸ்வரனே ஆகப்போகிறேம்—இதையெல்லாம் நினைத்து பயந்தால் காரியம் நடக்குமா?" என்று அம்பலம் தைரியம் கூற ஆரம்பித்தார்.

கிழவர் கடைசி வரையில் உறுதியாக நின்று மறுத்துப் பார்த்தார். முடியவில்லை. அம்பலத்தின் தீர்மானத்திற்கு இணங்கித் தீரவேண்டிய நிலைமை ஏற்பட்டது.

"எங்கே போய் புதிய தம்பதிகளைக் கல்யாண மேடையிலேயே கண்டு பிடித்துக் கொண்டு வருவது;" என்ற யோசனையோடு அம்பலம் குழம்பிக் கொண்டிருந்தார். இருவரும் வீடு நோக்கித் திரும்பினுர்கள்.

★

அம்பலம் அறைக்குள் நுழைவதைக் கண்ட மேனகா, அயர்ந்து தூங்குவதைப் போல் பாசாங்கு செய்தாள். அம்பலமும் அவளை எழுப்பும் எண்ணமின்றி, புதையலிலேயே தன் மனம்முழுதும் அலைய விட்டுக் கொண்டே படுத்தார். சாவிக் கொத்தை எங்கே வைக்கிருர் என்பதை மட்டும் மேனகா கவனமாகப் பார்த்துக் கொண்டாள்.

திருமணத் தம்பதிகள்—திருமணத் தம்பதிகள் — இந்த வார்த்தைகளையே அம்பலத்தின் வாய் மெதுவாக முணு முணுத்துக் கொண்டிருந்தது. திடீரென அவருக்கு ஒரு யோசனை தோன்றியது!

"துரை நம்மிடந்தானே இருக்கிருன். அவனுக்கு திருமணம் செய்து வைத்து காரியத்தை முடித்துவிட்டால் என்ன?"—இப்படி நினைவுச் சுழல்!

"திருமணம் என்றுல் ஒரு பெண்ணும் வேண்டுமே—அதற்கு எங்கே போவது? அப்படியே இருந்தாலும் மாப்பிள்ளை, பெண்—சம்மதங்கள் இருந்தால் தானே திருமணத்தை சுமுகமாக முடித்து, காரியத்தையும் சுலபமாக நிறைவேற்றிக் கொள்ளலாம்?"-இப்படிக் கேள்விச் சரங்கள்!

"அய்யோ–அந்தப் பரிமளா ஓடாமல் இருந்தாலும் இப்போது அவளுக்கும் துரைக்கும் திருமணத்தை நடத்தி, நம் எண்ணத்தை ஈடேற்றிக்கொள்ளலாமே!"—இப்படியெல்லாம் சிந்தனைப் புயல்கள்!

வெள்ளியம்பலம் குழப்பத்தின் எல்லை வரையில் போய்ச் சேர்ந்தார். தூங்குவதற்குக் கண்ணை மூடினுல்—திருமணம் நடப்பது போலவும், அந்தத் தம்பதிகள் முதல் இரவு சந்திப்புக்கு முன்பே கொலை செய்யப் படுவது போலவும், அவர்களது இரத்தத்தை கிணற்றில் தெளிப்பது போலவும், கிணறு வெடித்து தவலை தவலையாக—பாளம் பாளமாக–தங்கக் கட்டிகள் சிதறுவது போலவும், காட்சிகள் அடுக்கடுக்காய் நகரத் தொடங்கின. சாவிக் கொத்துக்காகக் காத்திருந்த மேனகாவும், அம்பலம் சிறிது அயர்ந்திருக்கும் சமயமாகப் பார்த்து, அதைக் களவாடிக் கொண்டு அறையை விட்டு பூனை போல் வெளியேறினுள்.

★

தங்கள் அறையின் கதவு திறக்கப் படுவதை அறிந்த துரையும், மலையாள பகவதியும் ஒருவரை விட்டு ஒருவர் விலகித் தயாராக நின்று கொண்டிருந்தனர். கதவு திறக்கப்பட்டது. மேனகா, கையிலே ஒரு அழகிய சிறு பெட்டியுடன் உள்ளே வந்து, "ம்–சீக்கிரம் சீக்கிரம்!" என்று துரையிடம் அவசரப் படுத்தினுள். துரையும் அவள் பின்னே மெதுவாக நடக்க ஆரம்பித்தான். மலையாள பகவதியும் அவர்களோடு புறப்பட்டான். கொல்லைக் கதவைத் திறந்து கொண்டு மூவரும் கொல்லைப்புறம் வந்து சேர்ந்தார்கள். மூவரும் ஆழ்ந்த பெருமூச்சுக்களால் தங்கள் இதய ஆசைகளைக் காட்டிக் கொண்டனர். கொடூரம் நிறைந்த சிறைச்சாலையில் ஆயுள் தண்டனை பெற்ற கைதியாக அடைபட்டிருந்த மேனகா, தனக்குக் கிடைக்க இருக்கிற விடுதலையை நினைத்துத் தானே என்னவோ, சுவாசப் பைகளின் ஆழத்திலிருந்து, அவ்வளவு நீளமான பெருமூச்சை வெளிப்படுத்தினுள். கொல்லைப் புறத்து சுவரைத் தாண்டியாக வேண்டும். தனக்குத்தான் நன்றுக வழி தெரியுமென்றும், தானே முதலில் சுவற்றில் ஏறி வழி காட்டுவதாகவும் கூறினுள், மேனகா. துரையோ, தானும், அதன்பிறகு மலையாள பகவதியும், கடைசியாக மேனகாவும் சுவரைத் தாண்ட வேண்டுமேன்று திட்டம் வகுத்தான்.

அந்தத் திட்டப்படி முதலும் இரண்டாவதுமாக சுவரேறிக் குதிக்கும் துரையும், மலையாள பகவதியும், மேனகாவைத் தங்கள் பின்னே வரவொட்டாமல் தடுத்து ஓடிவிடலாம். மேனகாவையும் ஒரு தவறிலேயிருந்து காப்பாற்றலாம். திட்டப்படியே சுவற்றில் முதலில் துரை ஏறினுன். வீட்டுக்குள்ளே ஏதோ சப்தம் கேட்டது போலிருந்தது. மலையாள பகவதி கொல்லைப் பக்கமுள்ள ஒரு புதரில் நன்றுக மறைந்து கொண்டாள். மேனகா, துரை சுவற்றில் ஏறுவதற்கு உதவிசெய்து கொண்டிருந்தாள். துரை பாதிச் சுவர் ஏறிவிட்டான். கொல்லைவாசல் பக்கமிருந்து, "அடேய்!" என்ற அம்பலத்தின் குரல் கேட்டது. மேனகா திரும்பினுள் திடுக்கிட்டு!

அம்பலம் துரையை நோக்கி ஒரு பளபளப்பான கத்தியை ஆவேசத்தோடு வீசினுர். துரையின் முதுகுப்புறம் பாய வேண்டிய அந்தக் கத்தியை மேனகா பாய்ந்து தடுத்தாள். கத்தி, மேனகாவின் நெஞ்சிலே பாய்ந்து தொத்திக் கொண்டது. மேனகா, அலறியபடி கீழே விழுந்தாள். தூங்கிச் கொண்டிருந்த காவற்காரர்கள் விழித்துக் கொண்டனர்.

அம்பலம், மேனகா விழுந்த இடத்திற்கு ஓடிவந்தார். துரையையும் காவற்காரர்கள் பிடித்துக் கொண்டார்கள். நிலைமையின் நெருக்கடியை உணர்ந்து கொண்ட மலையாள பகவதி, புதரிலிருந்து மெதுவாக நழுவி வீட்டுக்குள்ளே ஓடி, துரை அடைபட்டிருந்த அறையிலே படுத்துக் கொண்டு தூங்குவது போல் நடிக்க ஆரம்பித்தாள். அவள் இருதயத் துடிப்புகளை அவளால் அடக்கவே இயலவில்லை. இன்னும் என்ன நடக்குமோ என்ற அச்சம் அவளைக் கப்பிக் கொண்டது. துரையை இழுத்துவந்து அறைக்குள்ளே தள்ளினுர்கள். "குடுகுடுப்பைக்காரன் இருக்கிருனு?" என்று கேட்டபடி அம்பலம் உள்ளே பார்த்தார். அவன்தான் அயர்ந்து கொரட்டை விட்டுத் தூங்குகிருனே!

"சரி! குடுகுடுப்பைக்காரனை இவனேடு வைக்காதே! அவனை வேறு அறையில் போடு! துரையை இந்த அறையிலேயே போடு!" என்று ஜெயிலர், வார்டர்களுக்கு உத்திரவிடுவது போல, அம்பலம் தன் ஆட்களுக்கு கட்டளை யிட்டார்.

துரை அந்த அறையிலே பூட்டப் பட்டான். குடுகுடுப்பைக்காரனை தூக்கத்தோடு எழுந்து நடக்க வைத்து வேறு அறைக்குக் கொண்டு போனுர்கள். அவன் அதிக தூக்கத்தில் தள்ளாடுவது போல, விழுந்தும் எழுந்தும் அவர்களோடு போனுன். அவனும் ஒரு அறையில் அடைக்கப் பட்டான்.

ரத்தக் குளத்திலே நீந்துவது போல மேனகா கிடந்தாள். அவளைத் தூக்கி படுக்கையிலே கிடத்தினுர்கள். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. வாழ்க்கையிலே புதுமை காண விழைந்த அந்த எழில் மலர், கருகும் நிலையிலே காணப் பட்டது. நெஞ்சிலேயிருந்து பெருகும் உதிரத்தை, அவள் கண்களிலேயிருந்து பெருகும் கண்ணீர் தோற்கடித்தது. அவளைச் சூழ்ந்து அம்பலமும் ஆட்களும் நின்று கொண்டிருந்தார்கள். வாழ்விலே மாற்றம்—இருட்டிலேயிருந்து ஒளியுலகிற்கு விடுதலை—இவைகளை விரும்பினுள் மேனகா! ஆனுல் விடுதலை வேறு ரூபத்திலே வருவதற்குக் காத்திருந்தது.

[வளரும்]

# கதரே !-உனக்கு நிகர் பதரே !

கை ராட்டினமே
கதர் பூட்டினுமே!
—பட்டி தொட்டிகளி னெல்லாம் இந்த கீதம் பறந்து வந்தது.

கதரால் வெள்ளைப் பதர்களை விரட்டுவோம் என்று வீர முழக்கம் செய்தார்கள்.

கைராட்டையே ஆயுதம்
கதராடையே சோபிதம்!
—பாடல் கேட்டோம். பரவசப் பட்டனர் காந்தி பக்தர்கள்.

நலிந்துபோன இந்தியா சர்க்காவால் எழுந்து நடமாடப் போகிறது என்ருர்கள். ஐந்தாண்டுத் திட்டத்திலே கதர் வளர்ச்சிக்காகக் கோடி கோடியாக ஒதுக்கினுர்கள்.

நெசவுத் தொழிலாளர்கள் வீட்டு அடுப்பில் பூனை தூங்குகிறதே; பானை பொங்கி பல நாட்கள் ஆகின்றனவே—என்று பல முறை சொன்னேம்.

கதர் அபிவிருத்திக்குக் காட்டப்படும் ஊக்கத்தை—உள்ளன்பை நெசவாளர் நலனுக்குக் காட்டினுல் வேலையில்லாத் திண்டாட்டத்தில் பெரும்பகுதி குறையுமே என்று ஆதாரங்களை எடுத்து வீசினேம்.

அந்தக் கதர் ஏகாதிபத்யத் துரைகளோ இதைக் கேட்டார்களில்லை.

காந்தி துவக்கி வைத்தாரே என்பதற்காக கதரைக் கட்டிக் கொண்டு அழாதீர்கள். காந்தி சுதந்தர இந்தியாவுக்கு ஆலைகள் அவசியமில்லை என்ருர். ராட்சச இயந்திரங்களை ரத்தம் உறிஞ்சும் அட்டைகளுக்கு ஒப்பிட்டார். குடிசைத் தொழிலால்தான் இந்தியா குபேர புரியாக மாற வேண்டுமென்ருர்.

—இதையெல்லாம் காந்தி சொன்னுர் என்பதற்காக நிறைவேற்ருமலா இருக்கிறீர்கள்?

—இப்படியும் காரணங்களை விளக்கி பேருரை தந்தோம். செவி மடுத்தார்கள் இல்லை!

நேரு சென்னைக்கு வந்தபோது பக்தவத்சலனுரிடம் இருநூற்றி ஐம்பது ரூபாய்க்குக் கதர் உண்டியல் வாங்கி கதர் பக்தியைக் காட்டினுராம்!—இப்படியெல்லாம் கதருக்குப் பிரச்சாரம் தரப்படுகிறது.

இப்படியெல்லாம் அரும்பாடுபட்டு, கோடி கோடியாக ரூபாய்களைக் குவித்து கதர்த் திட்டம் தீட்டுகிருர்களே—அதையெல்லாம் தவிடுபொடி செய்து விட்டார் அவர்கள் அரவணைப்பிலேயே வாழ்ந்துவரும் அன்பர் ஒருவர்!

சென்னை மைலாப்பூரிலுள்ள சீனுவாச காந்தி நிலையத்தின் நூற்புப் பகுதியைத் திறந்து வைக்கும்போது கிருஷ்ணமாச்சாரியார் கதர் அபிவிருத்தியைப் பற்றி கீழ்க் கண்டவாறு திருவாய் மலர்ந்தருளியுள்ளார்:

"நெசவாளர்கள் கதர் நூலில் நெய்வதைவிட மில்லில் தயாராகும் நூலில் நெய்வதில்தான் அதிக லாபம் பெறுகிருர்கள். இந்திய அரசாங்கம் கதர் விருத்திக்காக ஏராளமாகப் பொருள் செலவிடுகிறது என்பது உண்மைதான். ஆனுல் கதருக்கு மக்களிடையே இருக்கும் ஆதரவு குறைவுதான் என்பதையும், இருபது அல்லது இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கதரை யாருமே தீண்டமாட்டார்கள் என்பதையும், இதுபோன்ற நூற்பு சங்கங்கள் மட்டும்தான் அப்போது கதர் நூல் தயாரித்துக்கொண்டிருக்கும் என்பதையும் யாரும் மறக்கமுடியாது!"

சாட்சாத் கிருஷ்ணமாச்சாரியின் பேச்சுதான் அது!

கதருக்கு மக்களிடையே செல்வாக்கு குறைவு! இன்னும் இருபது அல்லது இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கதர் அணிய நாதியிருக்காது!

—இருந்தாலும் கதருக்காக பொதுமக்களது வரிப் பணத்திலிருந்து கோடிக் கணக்கான ரூபாய்களை இந்திய அரசாங்கம் வாரி இறைக்கிறது.

இதற்குப் பெயர்தான் சோஷலிச பாணியாம்!—இதைச் சுட்டிக் காட்டினுல் எட்டிக்காய் நிகர் வசை புராணம் பாடுகிருர்கள் காந்தி சீடர்கள்!

# உங்கள் பார்வை

[ 'உங்கள் பார்வை' உங்கள் பகுதி. அன்றாட அரசியல் நிகழ்ச்சிகளின் விமர்சனம்; மக்கள் கவனத்துக்குரிய உள்ளூர் நிகழ்ச்சிகள்-இவை பற்றி சுருக்கமாக எழுதி அனுப்புங்கள்-பிரசுரிக்கிறோம்! ]

## என்ன தகுதியோ?

சென்னை-1
1—10—55

அன்புள்ள ஆசிரியருக்கு,

சமீபத்தில் நான் சினிமாப் படம் பார்த்தபோது அதிலே வந்த செய்திப்படம் என்னை வியப்புக் கடலில் ஆழ்த்துவதாக இருக்கிறது.

இந்திய அரசாங்கத்தினர் தயாரிக்கும் செய்திப் படத்தில் ஐந்தாண்டுத் திட்டத்திற்கான விளக்கங்கள்; முக்கியமான நிகழ்ச்சிகளின் படப் பிடிப்புகள்—இவைகள்தான் காட்டப்பட வேண்டும்! அதுதான் நேர்மை வழிப்பட்ட முறையும் கூட!

ஆனால் இந்த வாரத்து செய்திப் படத்தில் இந்திரா காந்தி கலந்து கொண்ட ஒரு கூட்டத்தின் நிகழ்ச்சி காண்பிக்கப் பட்டது.

இந்திரா காந்தி யார்? செய்திப் படத்தில் காண்பிக்கப்பட வேண்டிய அளவுக்கு இந்திய அரசியலில் இடம் பிடித்துக் கொண்டிருப்பவரா? சேவையின் சிகரமா?—இல்லை! நேருவின் புத்திரி என்பதைத் தவிர செய்திப் படத்தில் காண்பிக்கப்பட வேண்டிய தகுதி அவருக்கு என்ன இருக்கிறது?

தங்கை விஜயலட்சுமிக்கு உயர் பதவி வழங்கி உலகம் சுற்ற விட்டார். இப்போது: செய்திப் படங்களில் புதல்வியைத் திணிக்கிறார். இதுதான் ஜனநாயகமா?

இப்படிக்கு,
கே. ஏகாம்பரம்.

★

## அலட்சிய மனப்பான்மை!

பெரம்பூர்.
3—1055

அன்புடையீர்,

நேரு தமிழகத்துக்கு வந்திருந்த போது அவரை மக்களைவிட மலர் மாலைகள்தான் அதிகம் வரவேற்றன. சென்னையில் அவர் 'மலர் மாலை வரவேற்பை'ப் பற்றி கீழ்க் கண்டவாறு பேசியிருக்கிறார்:

"மலர்களை வீசுவது ஒரு பெரிய தொந்தரவாகி விட்டது... குண்டு பொழிவது மாதிரி மலர்கள் வந்து விழுகின்றன. அதைத் தடுக்க வேண்டியிருக்கிறது. இதனால் மலர் வீசுபவருக்கும் நன்மையில்லை. யார்மீது வீசப்படுகிறதோ அவருக்கும் நன்மையில்லை... நல்ல புஷ்பங்களை விரயமாக்க வேண்டாம். மாலைகளையும் இம்மாதிரி விரயம் செய்ய வேண்டாம்!"

நல்ல உபதேசம் செய்திருக்கிறார் நாடாளும் அமைச்சர். ஆனால் அவர் சேலத்திலே செய்தது என்ன? இதோ 'தினமணி' தரும் செய்தியைப் பாருங்கள்.

விஜயராகவாச்சாரியார் தென்னாட்டுக் காங்கிரசின் தூணாக இருந்தவர். அவரது நினைவை கௌரவிப்பதற்காக நேரு விஜயராகவாச்சாரியின் புத்திரிக்கும், பேரனுக்கும் பேட்டியளித்தாராம்—இது பெருமைப் படக்கூடிய விஷயம்தான்! ஒரு தேசப் பக்தரை பிரதமர் இப்படித்தான் கௌரவிக்கலாம்!

—ஆனால் அதன் பிறகு நடந்தவைதான் நம் நெஞ்சை நோகச் செய்கிறது.

சேலம் தெருக்களின் வழியாக நேரு ஊர்வலமாகச் சென்றபோது ஒரு ரோஜா மாலையை விஜயராகவாச்சாரியின் இல்லத்தின்மீது வீசி, சேலம் தேச பக்தருக்கு நேருஜி தமது பக்தி பூர்வமான அஞ்சலியைச் செலுத்தினாராம்!— 'தினமணி' எழுதுகிறது இப்படி!

மலர்மாலைகளைத் தூக்கி எறிந்தாராம்! மலர்களை விரயம் செய்ய வேண்டாமென்று உபதேசித்தவர் பண்பாடு உணராதவர் போல தூக்கி எறிந்திருக்கிறார்!

இதுதான் ஒரு தேச பக்தருக்கு ஒரு தேசத் தலைவர் செய்யும் பக்தி பூர்வமான அஞ்சலியா?—யோசித்துப் பார்க்க வேண்டும் நேருவின் சீடர்கள்.

அரண்மனைவாசியாக இருந்தால் கூட அலட்சிய மனப் பான்மை கூடாது!

இங்ஙனம்,
எல்லப்பன.

★

## ஆரூர் மும்மூர்த்திகள்!

தஞ்சை
5—10—55

அன்புள்ள ஆசிரியருக்கு,

30—9—55 'முரசொலி'யில் தங்களது ஆரூர் மும்மூர்த்திகளைக் கண்டேன். மூக்கறுந்த பாஷையிலே மூக்காலே பாடிவிட்டு, புகழ் பெற்றுவிட்ட மும்மூர்த்திகளை அவர்களது வாயாலேயே சொல்லச் செய்திருக்கும் நடை என்னை மிகவும் கவர்ந்தது. இன உணர்ச்சியற்ற திராவிடர்களை தட்டி யெழுப்பும் விதத்திலே எழுதியிருக்கிறீர்கள். இது போல் மேலும் நிறைய எழுதி உறங்கிக் கொண்டிருக்கும் திராவிடர்களை தட்டி எழுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
டி. இராமச்சந்திரன்.

## பெட்டி இங்கே....

★ 5-ம் பக்கத் தொடர்ச்சி

பொதுப் பெயரால்—திராவிடக் கூட்டாட்சி என்ற பெயரால் இணைக்கப்பட வேண்டும். ஆனால் இந்த இணைக்கப்பட்ட மொழியரசுகள் என்னும் இரயில் பெட்டிகளை இழுத்துச் செல்லும் எஞ்சின் வடக்கே இருந்து வரலாகாது. இப்போது பூட்டப்பட்டுள்ள அந்த வடக்கு எஞ்ஜினை அகற்றியாக வேண்டும்.

பெட்டி பெரம்பூரிலே!

எஞ்சின் சித்தரஞ்சன் தொழிற்சாலையிலா?

நாடு, திராவிடர்க்குச் சொந்தம்!

ஆள்வது வடக்கத்தியாரா?

வேண்டாம்—மொழிவழி மாகாணப் பெட்டிகள் வடநாட்டு எஞ்ஜினால் இழுக்கப்பட வேண்டாம்.

அந்த எஞ்ஜினை எட்டித் தள்ளுவோம்! எமது நாடு திராவிடம்-அது வடவருக்கு அடிமையில்லை என்று முழக்குவோம்! இதுதான் நேருவின் வருகை, நமக்குத்தரும் உற்சாக மிக்க பாடமாகும்!

★

## சென்னை நகர் தேர்தல்....

★ 2-ம் பக்கத் தொடர்ச்சி

*அக்கரை காட்டாததோடு, கட்சி விளம்பரத்திற்கென்று நிறுத்தி வைக்கப்பட்ட இருவரின் தோல்வியால் 'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' என்ற பரிதாப மொழிக்கு வேறு இலக்காகி விட்டார்கள் என்பதுதான். எது எவ்வாறாயினும் இந் நகரசபைத் தேர்தலில் பொது விரோதியான காங்கிரசை படுதோல்வியடையச் செய்ய ஒன்பது பேரை நிறுத்திவைத்த சோஷலிச தொழிலாளர் முன்னணியும், நாலு பேரை நிற்கவைத்த பிரஜா சோஷலிஸ்டும், இரண்டு பேரைநிறுத்திய கம்யூனிஸ்டும், நூறு பேர்களாகப் போட்டியிட்ட சுயேச்சை வாதிகளும் ஒன்று திரண்டு ஒரு அணியின் கீழ் கட்டுக்கோப்பாக நின்று போட்டியிடவில்லை என்பது குறிப்பிடத் தகுந்தது மட்டுமல்ல; பரஸ்பர நல்லுணர்வையும், கூட்டு முயற்சியையும் கைக்கொள்ளாததால் காங்கிரசின் மெஜாரிட்டி பலத்திற்கு ஒரு வகையில் வழி கோலியது போலாகிவிட்டது.*

*எனினும் காங்கிரஸ்காரர்களின் இந்த வெற்றியானது ஸ்தாபனத்தின் முழு வெற்றியல்ல, போலி காங்கிரஸ்காரர்களின் வெற்றி! பணம் படைத்தோரின் வெற்றி! கட்சி மாறுவதை வியாபார லாபமாகக் கருதும் பதவிப் பித்தர்களின் வெற்றி! பிற்போக்கு சக்திகளின் வெற்றி! என்பதை உண்மை உணர்வோர் கூறத்தான் செய்வர்!*

★

## பிறைவானம்...

★ 11-ம் பக்கத் தொடர்ச்சி

*அவர் திடீரென்று தீர்மானித்துவிட்டார், அவன் திருடன் என்று. வாசலில் உட்கார்ந்தபடியே திட்டினார். திட்டிக் கொண்டேயிருந்தார். அணை உடைத்து பாயும் வெள்ளம் போல் குமுறிக்கொண்டு கிளம்பியது கோபம்! திட்டுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?*

*"திருட்டு ராஸ்கல்! என்னையே ஏமாற்றி விட்டானே!...... அவன் மட்டும் என் கையில் கிடைக்கட்டும்; முதுகுத் தோலை உறித்துவிடுகிறேன்; முட்டாள்-முழுச் சோம்பேறி; அயோக்கியன்—அநியாயக்காரன்..." அவரது வசை புராணம் நீண்டு கொண்டே போனது. அப்போது அவன் மட்டும் அவர் கண்களிலே தென்பட்டிருந்தால் போதும்; அவனைக் கொன்றேயிருப்பார்! அவ்வளவு ஆத்திரம்!*

*நன்றாக இருட்டிவிட்டது. இனியும் காத்திருந்து என்ன பலன்? திண்ணையை விட்டு எழுந்தார். வீட்டிற்குள் நுழையப் போனார். அப்போது 'ஐயா' என்றொரு குரல் அவரைத் தடுத்தது; அழைத்தது. திரும்பிப் பார்த்தார். ஒரு சிறுவன் நின்று கொண்டிருந்தான், கலங்கிய கண்களுடன்.*

*"யாரப்பா நீ?" என்று கோபமுடன் கேட்டுக் கொண்டே அருகில் வந்தார் அவர்.*

*அவன் கையை நீட்டினான். "இந்தாங்க" என்றான். அவர் வாங்கினார். சில்லரை! எண்ணினார். பதினாறு அணுக்கள் இருந்தன.*

*"யாரப்பா நீ? இது ஏது உன்னிடம்? அந்தத் திருட்டு ராஸ்கல் உன்னிடம் கொடுத்தானா?"*

*அவர் முடிக்கவில்லை. "ஐயா, ஐயா! என் அண்ணனைத் திட்டாதீர்கள் ஐயா!" என்று அந்தச் சிறுவன் குறுக்கிட்டான். மேலும் தொடர்ந்து சொன்னான்: "ஐயா...என் அண்ணன் உங்களிடமிருந்து ஒரு ரூபாய் வாங்கிக் கொண்டு சில்லரை மாற்றச் சென்றானாம். திரும்பி வரும்போது... ஐயா நான் எப்படிச் சொல்வேன், அந்த கோரத்தை. ஒரணா கிடைக்கப் போகிறது என்ற ஆவலாலோ... அல்லது காரில் பறந்துவந்த சீமானின் கண்மூடித் தனத்தாலோ...ஐயோ... என் அண்ணன் காரிலே சிக்கி விட்டானய்யா. சாகுமுன் அவன் தந்தான் இந்த ஒரு ரூபாயை, உடனே உங்களிடம் சேர்ப்பிக்கும்படி..." என்றான்.*

*கருணாகரரின் கண்கள் நீரால் நிறைந்தன. "திருடனல்லவா அவன்? ஐயோ; என்ன முடிவு செய்தேன்; என்னென்ன பேசி விட்டேன்!" என்று முணுமுணுத்தார். கண்களிலே வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தார். அந்தத் தம்பி தெரு முனையில் சென்று கொண்டிருந்தான்!*

—சொர்ணம்



# அடிக்குதடா சுழற்காற்று!

## காங்கிரஸ்

**1**

"இமயமலை யுச்சிமுதல் குமரிவரை யொன்றே
இதயமதில் ஒருநினைவு, ஒருகலையே, பண்பே,
அமைந்திட்ட பேரரசின் அங்கங்கள் எல்லாம்
அங்கில்லை வேற்றுமனம், கொள்கையிலே மோதல்
எமைமிஞ்ச யெவருமிலை, ஒரு நிலையில், வழியில்!
எழுந்தார்க்கும் முரண்நிலைகள், ஒருமரத்தின் கிளைகள்.
நமைநாமே ஆளுகிறோம், நமக்குள்ளே பூசல்
நச்சுமனம், நாச நிலை, நண்ணிடுதற்கில்லை.

**2**

வஞ்சனையும், வெஞ்சமரும் வேரறுக்கும் வாழ்வை.
வளர்த்திடுக "ஒருமை நிலை" வாழ்த்திடுக பண்பை.
துஞ்சிடுக துயரநிலை, தூவிடுக வாழ்வில்
தூயவிதை, அறுவடையில் தாங்கிடுக இன்பம்.
அஞ்சிடுக பிளவுநிலை, அதுவளர்ப்போர் போக்கை
அழித்திடுக, காத்திடுக, பாரதத்தின் கீர்த்தி!
மஞ்சமடா, பாரதம்நம், கலைகள் வளர்தொட்டில்
மரணநிலை யற்றதலம், மாதவத்தோர் கூடம்!

**3**

இந்தியன்நீ உனது கலை பாரதத்தின் கலைகள்.
இதிகாசம் புராணமிவை, இங்குனது சொத்து.
விந்தியத்தின் தெற்கு வடக்கோதிடுதல் மடமை
வேதாந்தி சங்கரரும் வேதியரும் நம்மோர்.
இந்திமொழி தழுவிக்கொள், பாரதத்தைக் காக்கும்
இணைப்பதுவே! இதைவிட்டால் இடுகாடே சொர்க்கம்.
சித்தித்தல் தொல்லைவிதை, விளைவுமலர்ப் பூசல்
தாங்கிக்கொள் எதுவரினும், எதுதரினும், நன்றாம்!

**4**

மொழிவழி நீ பிரிந்திடுதல், மாபெரிய குற்றம்!
முட்டாள் நீ வலுவுறுத்தின், இந்தியா என்றேது!
வழிவழி நீ ஆட்சிமுறை வகுத்திடுதல் கேடே
வீழ்த்திடுக மொழியுணர்வை, வளர்த்திடுக வுள்ளம்
பழிபெருக்கும் உரிமையினை உதறட்டும் உதடு
பாரதமுன் குறிக்கோளாம், பண்டிதருன் தலைவர்!
விழியினிலே செந்நீரா? விந்தைமகன் நீதான்
வேதனையா பாரதத்தின் சாதனையைச் செப்பின்.

**5**

ஆங்கிலத்தை ஓட்டிடுக, அந்தயிடம் வந்த
அல்லியவள் இந்தி மகள்! அவள்மகிழக் கொஞ்சு
பாங்கல்ல, வட்டார மொழிவளர்ச்சி நாடல்
பண்டிட்ஜீ தந்த மகள், விலைமகளா? பாவம்!
திங்கன்றோ இனவுணர்வு, பாரதம் என்னாகும்?
தீய்த்திடுக, தீயவரை, இந்தியனே வாராய்!
ஓங்கிடுக பாரத நாடுயர்ந்திடுக, கலைகள்
ஓங்குக பண்பாடு, தலைவர்களும் சேர!

## கழகம்

**6**

"பிரிவினையில் அழிவென்றாய், பாரதத்தின் புகழ் சொன்னாய்,
பண்பாட்டின் வழிநவின்றாய், பரந்தவுளம் தேவையென்றாய்,
விரிந்தமன வித்தகனே! விரிமார்ப! உனைக் கேட்பேன்.
விந்தியத்தின் வடகலைக்கும் தென்கலைக்கும் ஒருமையெங்கே?
சரிந்துவிட்ட திருநாட்டின் கலைமொழிகள், பண்பாடு.
சரிதங்கள், காவியங்கள், சிற்பங்கள் தனித்தவை காண்!
பரி, கரிகள், வேல், வில்வாள், மனம், மானம், அறம், நேர்மை
பார் வாழ்த்தும் வள்ளன்மை, திருநாட்டின் பண்ணணிகள்!

**7**

உடை, உணவு, மொழி வழிகள், உள்ளன்பின் ஈகையிலே
உவப்பினிலே உபசரிப்பில், உறுதியிலே, வீரத்தில்
படை நடத்தும் போக்கதினில், போர்முறையில், அறநெறியில்
பார்த்தனையோ ஒருமை நிலை, பகருவையோ ஆதாரம்?
தடை தந்த வெளிநாட்டான், துப்பாக்கிப் பெருமுனையால்
தந்ததடா ஒருநாடு: முரண்பாட்டின் விபரீதம்!
நடை போட்டார் அவ்வழியே, அவ்வழியே வந்தவர்கள்
நாடாளும் பாரதத்தார், ஆணவத்தை நிலைநாட்ட!

**8**

பாரதத்தின் ஒற்றுமையைப் பறைசாற்றும் அன்புடையோய்
பார்த்தாயோ, தாமோதர் அணைக்கட்டும், பக்ராவும்
சீர் உதிர்க்கும் தொழில் நிலையம். ஆலைகளின் பெருமுழக்கம்
கண்ணாடி, அலுமினியம், உரம். மோட்டார், காகிதங்கள்,
பார்வியக்கப் பெருக்கி வரும் பெருந்தொழிற்சாலை களெல்லாம்
பார்வை யிழந்திட்டவனே பார் அங்கே! வடநாட்டில்.
யார் இதனைப் பேசுவது? எனுங்கேள்வி வெட்டியடா
யார்இதனைத் தவறென்பார்? அதைச்சாற்றி மகிழ் ஊட்டு.

**9**

ஐந்தாண்டுத் திட்டங்கள் ஒன்றல்ல, இரண்டப்பா!
ஐயமுறும் என் அன்பே! தென்னகத்தின் கதி யென்ன?
ஐந்தாண்டுத் திட்டங்கள் வடநாட்டை வளர்த்துதடா
அவையிங்கே, விழிப்புனலைப் பெருக்குதற்குச் சொல்லுதடா
நைந்தொழிந்த தென்னாட்டான், பேசுகிறான், தாயகத்தின்
நிலையினைப்பார் சுடுகாடு, வடநாடோ பூந்தோட்டம்.
வெந்தவர்கள் நாம்சிந்தும், வெங்குருதி பணமாக,
வடநாட்டான் அதைக்கொள்ளை, கொண்டிடநாம், கட்டுண்டோம்!

**10**

நீதியென இதை நவில நாவுண்டா, கதர் தரித்தோய்,
நீ நம்பும் "ஓர் இந்தியா" வஞ்சகத்தின் சூழ்ச்சியடா
பீதிகொண்ட சமுதாயம் நம்பிக்கைதான் குன்றப்
பெற்றெடுக்கும் செல்வமடா, "பெரும் புரட்சி" நெஞ்சில்லை!
ஓதி விட்டேன், காலத்தின் கடமையினை அதுசெய்யும்
ஓங்கி யெழும் தென்னாடு தன்கடமை தான் செய்யும்
மீதி யிங்கே என்னவுண்டு, எழுந்துலரும் நரம்பின்றி,
மீந்து விட்ட சுடுரத்தம்! ஏமாறோம், களங்காண்போம்.

**11**

வெடிக்குதடா என்உள்ளம், விம்முதடா மார்பு.
வெட்கத்தை எங்கொளிப்பேன், வேதனையின் சின்னம்!
துடிக்குதடா என் தோள்கள், சீறுதடா வீரம்!
துள்ளுதடா என் தசைகள், தீயவரைத் தாக்க.
படிக்குதடா என் வுள்ளம், புரட்சி வரலாற்றை.
பாய்ந்து விட்ட குருதியிலே பிணமலைகள், வெற்றி!
அடிக்குதடா சுழல் காற்று, ஆச்சுதடா நேரம்
ஆர்த்திடடா, அடைந்திடுவோம், திராவிடத்தை இன்றே!



# நூலேணி

## காவியம்

— வார வெளியீடு. ஆசிரியர்: சுரதா. 12, படவெட்டம்மன் கோயில் தெரு, சென்னை—12. விலை 1-அணா

'ஒரு கவிதைப் புத்தகத்தை வெளியிடுவது என்பது ஒரு ரோஜா இதழை கேன்யான் மலைப்பிளவில் போட்டுவிட்டு, அது எழுப்பும் எதிரொலிக்காகக் காத்திருப்பது போன்றதாகும்—என்று டான் மார்க்விஸ் சொல்லியிருக்கிறார். ஆனால் கவிஞர் சுரதா 'காவியம்' என்னும் கவிதை ஏட்டின் மூலம் மாபெரும் ரோஜாக் கொல்லை ஒன்றையே நாட்டிலே நடமாட விட்டிருக்கிறார்! வரவேற்க வேண்டிய செயல்! வாழ்த்துக்கூற வேண்டிய முயற்சி!

புதிய உவமைகளும், புதுப்புது சொற்களும் சுரதாவின் நடைக்குரிய மைல் கற்கள். அவை 'காவியத்'திலே ஏராளமாகக் காணக் கிடக்கின்றன.

பழநிற நேரு, சொந்தப்
பவனியைத் தொடங்கி விட்டார்.
எழுந்தது சிங்கம் என்பர்,
இங்குள்ள காந்தி பக்தர்.
எழுந்தது சிங்கம் என்றால்,
இரைதேடும்? இசையா தேடும்?

—இதுபோலத் துடிப்பான வரிகள் பல உண்டு, காவியத்தில்!

'குயிலு'க்குப் பின்னர் இந்த 'வானம்பாடி' எழுப்பும் குரலினை தமிழகம் இருகையேந்தி வரவேற்கும் என நம்புகிறோம்.

★

## காவியப் பாவை

—கவிஞர் முடியரசன். வெளியிடுவோர்: முத்து நிலையம்; காரைக்குடி. விலை ரூபாய் ஒன்று.

தோழர் முடியரசன் பாரதிதாசனுக்குப் பின் தோன்றிய கவிஞர்களில் முன்வரிசையில் நிற்போரின் முக்கியமானவர். அவரது 'காவியப்பாவை' என்னும் சமீபத்துக் கவிதைத் தொகுப்பு சர்க்கரைப் பொங்கலென இனிக்கிறது. 'பாடுவதென்றால் தமிழினில் பாடு'; 'வணக்கம் என்று சொன்னால் வாய் நோகுமோ? ஐயா!'—போன்ற கவிதைகள் இசையொடு பாடும்போது பேரின்பம் தரும் வகையில் அமைந்திருக்கின்றன,

ஒரே ஒரு குறை — 'எங்கள் நாடு' என்னும் கவிதையிலே 'கல்யாண சுந்தரனார், சாமிநாதன், மறைமலை, கவிமணி, பாரதி, ஈ. வே. ரா. பெரியார்'—ஆகியோர் வாழும் நாடாக தாயகத்தைக் குறிப்பிட்டிருக்கிறார்; அதில் அண்ணாவின் பெயரை ஏனோ எழுத மறந்தார்!

★

## ரேடியோ நாடகம் எழுதுவது எப்படி?

ஆசிரியர்: பி. எஸ். ராமையா.

ரேடியோ நாடகமாகத்தான் இருக்கட்டும்; அல்லது எந்த நாடகமாகத்தான் இருக்கட்டுமே—அவை யாவும் குறுக்கெழுத்துப் போட்டிகளல்ல; அகராதியைப் பார்த்து சில வார்த்தைகளை நிறப்பி விடுவதற்கு! இருந்தாலும் இந்தப் புத்தகம் திரு பி. எஸ். ராமையாவால் எழுதப்பட்டது. எனவே ஆர்வமுடையோருக்கு பயன் படுமெனக் கருதுகிறோம்.

நல்லவையும், காதுக்கு இனிமையானவையும் பிடிக்காத கேஸ்கரின் சாம்ராஜ்யத்தில் எத்தனை இலக்கணப் புத்தகங்கள் எழுதி புது எழுத்தாளர்களை உற்பத்தி செய்த போதிலும் கூட என்ன பிரயோஜனம் கிடைக்கப் போகிறது!

[விலை ரூ. 1-8-0. வெளியீடு: பிரேமா பிரசுரம், சென்னை-24.]

★

## நீங்கள் உயரமாக வளர்வது எப்படி?

ஆசிரியர்: கார்த்திகேயன்.

குள்ள மானவர்களுக்கும்—தேகப்பயிற்சி செய்யக் கூடிய அளவுக்கு தேகத்தின் மீது அக்கரை கொண்டவர்களுக்கு இந்தப் புத்தகம் பயன்படும்

[விலை ரூ. 1-8-0. வெளியீடு: பிரேமா பிரசுரம்; சென்னை-24.]

## கிடைக்கப் பெற்றோம்.

**செக்கிழுத்த சிதம்பரனார்**

[ஆசிரியர்: ப. க. மன்னர் மன்னன். ப. மு. க. வெளியீடு, காவேரிப்பட்டணம். விலை ரூபாய் ஒன்று.]

**காதல் துரோகிகள்**

[ஆசிரியர்: கோ. வேந்தன். வேந்தன் பதிப்பகம், அர்ச்சுனபுரம் (வடாற்காடு மாவட்டம்) விலை அணா ஆறு]

**பிரிக்க முடியுமா?**

[ஆசிரியர்: கோ. வேந்தன். வேந்தன் பதிப்பகம், அர்ச்சுனபுரம். விலை அணா பனிரெண்டு]

## கொள்கை வளருது கோபுரம் போலே!

### சென்னை (மைலாப்பூர்)

8—10—55 சனி மாலை 5-30 மணிக்கு, சென்னை 44-வது வட்ட தி. மு. க. சார்பில், மயிலை ராக்கியப்ப முதலித் தெருவில், தோழர் பி. வீ. ஆனந்தன் அவர்கள் தலைமையில், தோழர்கள் நாஞ்சில் கி. மனோகரன், சென்னை மாவட்டச் செயலாளர் இளம்பரிதி—ஆகியோர் பேசுவர்.

### கல்மண்டபம் (விழுப்புரம்வட்டம்)

8—10—55 சனியன்று தி. மு. க. இளைஞர் படிப்பக திறப்புவிழா நடைபெறும். தோழர் தமிழ்மணி அவர்கள் தலைமையில், தோழர் பொன். சொக்கலிங்கம் அவர்கள் கொடியேற்றுவார்கள். தோழர் தில்லை-வில்லாளன், தோழியர் சத்தியவாணிமுத்து—ஆகியோர் பேசுவர்.

வ. ஆ. மாவட்டத்தில் மாநில மாநாட்டு நிதிஅளிப்பு கூட்டங்கள்

8-10-55 கவசம்பட்டு.
9-10-55 காலை, வேலூர்.
,, மாலை, திருப்பத்தூர்.

பொதுச் செயலாளர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும், மாவட்டச் செயலாளர் முல்லை சத்தியும் கலந்துகொள்வார்கள்.

### சென்னை (ஆள்வார் பேட்டை)

9—10—55 ஞாயிறு மாலை 6—மணிக்கு, சென்னை 46-வது வட்ட தி. மு. க. கிளைக் கழக முதலாண்டு விழாவில் தோழர் எஸ். எஸ். பி. லிங்கம் அவர்கள் தலைமையில், தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் "மக்களும் ஆட்சியும்" எனும் பொருள் பற்றிப் பேசுவார். தோழர் சம்பத் அவர்களின் கோகலே மன்ற பேச்சு ஒலிபரப்பப்படும்.

### சென்னை (1-வது வட்டம்)

9—10—55 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு, 1-வது வட்ட [தொண்டையார் பேட்டை] கழகப் பணிமனையில் தோழர் தென்னரசு அவர்கள் தலைமையில் தோழர் சம்பத் அவர்களின் கோகலே மன்றப் பேச்சு ஒலி பரபப்படும்.

### மதுரை

10-10-55 திங்கள் இரவு 10-30 மணிக்கு, மதுரை பழனி டாக்கிஸில் மு. கருணாநிதி அவர்கள் முன்னிலையில், இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராஜேந்திரன் குழுவினர் நடிக்கும் மணிமகுடம் நாடகம் நடைபெறும்.

### திருப்புத்தூர்

20-10-55 வியாழன் மாலை 2-30 மணிக்கு, கருணாநிதிப் படிப்பகத் திறப்பு விழா தோழர் பொன்னம்பலனார் தலைமையில் நடைபெறும். அறிஞர் அண்ணா அவர்கள் படிப்பகத்தைத் திறந்து வைப்பார்கள்.

அன்று மாலை 5-30 மணிக்கு, சிவகங்கை ரோட்டுத் திடலில் தோழர் மதுரை முத்து அவர்கள் தலைமையில், அறிஞர் அண்ணா, தோழர் அ. பொன்னம்பலனார்—ஆகியோர் பேசுவர்.

வடாற்காடு மாவட்ட தி. மு. க. கிளைக் கழக செயலாளர்களுக்கு:

வேலூர் வட்டத்தில் தோழர் கருத்தோவியன் அவர்களும், வாணியம்பாடி வட்டத்தில் தோழர் ஏ. எல். முனிரத்தினம் அவர்களும், திருப்பத்தூர் வட்டத்தில் தோழர்கள் எம். நடேசன், க. நெடுஞ்சோழன்—அவர்களும், திருவண்ணாமலை வட்டத்தில் தோழர் ப. உ. சண்முகம் அவர்களும், செங்கம் வட்டத்தில் தோழர் எஸ். என். ராஜன் அவர்களும், போளூர் வட்டத்தில் தோழர் சுப்பிரமணியம் அவர்களும், ஆரணி வட்டத்தில் தோழர் கன்னையன் அவர்களும், ஆற்காடு வட்டத்தில் தோழர் ஏ. கே. வில்வம் அவர்களும், மற்ற வட்டங்களில் மாவட்ட செயலாளரும், மாநில மாநாட்டு நிதி வசூலிக்க சுற்றுப் பயணம் செய்வார்கள். கிளைக் கழகச் செயலாளர்கள் அவர்களிடம் நிதியை அளித்து மாவட்டத்தின் பங்கை பூர்த்தி செய்ய வேண்டுகிறேன்—என்று மாவட்டச் செயலாளர் தோழர் முல்லை-சத்தி அறிவிக்கிறார்.





# பிறை வானம்
பிள்ளைகள் பகுதி...

## திருடன்....?

மாலை மங்கியது — இருள் கவ்விக்கொண்டு வந்தது.

தெருக் கோடியிலே ஒரு வீடு. அதன் வாசலிலேயே உட்கார்ந்திருக்கிறார் அந்த வீட்டுக்காரர். அவர் முகத்திலே 'எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது' என்பார்களே—அதைப்போல ஒரே கோபம்! அவரது சிவந்த கண்கள் அடிக்கடி தெருவின் மறுமுனையை உற்றுப் பார்க்கின்றன; வாயோ அடிக்கடி முணுமுணுக்கிறது, "திருட்டுப் பயல் — பகல் கொள்ளைக்காரன்! அவனை நம்பினேனே நான்!" என்று!

அவர் யாரைத் திட்டுகிறார்? அவரது கோபத்திற்கு இலக்கான அந்தத் 'திருடன்'தான் யார்? அவரிடமிருந்து அவன் எதைத்தான் திருடிச் சென்று விட்டான்?

இந்தக் கேள்விகளுக்கு விடை தேவையானால், அன்று மாலை நடந்த சம்பவம் ஒன்றை நான் உங்களுக்குச் சொல்லியாக வேண்டும்.

அன்று மாலை...வீட்டு வாசலில் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தார் கருணாகரர். பையன் ஒருவனை தன்னைத் தானே திட்டிக் கொண்டிருக்கிறாரே, அவர் தான். அப்போது மாலைச் செய்தித்தாள் ஒன்றை வேகமாக வீசி எறிந்துவிட்டுப் போனான் 'பேப்பர் பையன்'. அவர் செய்தித் தாளை பிரித்தார். 'சீசன்' செய்தியான நகர சபைத் தேர்தல்கள் பற்றி படிக்க ஆரம்பித்தார். அப்போது "ஐயா" என்ற தீனக் குரல் எழும்பியது அவருக்குப் பின்னாலிருந்து. கோபத்துடன் திரும்பினார். ஆனால் திரும்பிய மறு கணமே கோபம் தணிந்தது. அவருக்குப் பின்னால் ஒரு ஏழைச் சிறுவன் நின்றுகொண்டிருந்தான். பஞ்சடைந்த கண்கள் — பரட்டைத் தலை—பசிக் கோலம் — பரிதாபம் கிளம்பத்தானே செய்யும்!

"என்னப்பா?" என்றார், அவர்.

"ஐயா! ஏழைய்யா! ஓரணா சில்லரை இருந்தா கொடுங்கய்யா!" அவன் கேட்டான். குரலிலே தெம்பு இல்லை. எப்படி இருக்கும்? இதைப் போல அவன் அன்று பொழுது விடிந்தது முதல் எத்தனையோ பேர்களிடம் கேட்டு விட்டானே!

"சில்லரை இல்லையப்பா என்னிடம்?" என்றார் அவர். வழக்கமாகப் பிச்சைக்காரர்களுக்குச் சொல்லும் பதிலல்ல அது. உண்மையிலேயே அவரிடம் சில்லரை இல்லைதான்.

அந்தப் பையன் நகரவில்லை. "ஐயா! கொஞ்சம் பாருங்கய்யா! ஒரு குடும்பத்தையே காப்பாற்றும் பெரும் பொறுப்பை தலையில் சுமந்து தத்தளிக்கும் என்னைப் பாருங்களய்யா" என்று கெஞ்சினான்.

"என்னை என்னப்பா செய்யச் சொல்றே? இதோ பார், ஒரு ரூபாயாகத்தான் இருக்கு!" என்று கோபமுடன் சொல்லிக் கொண்டே தன் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாய் நோட்டு ஒன்றை வேகமாக எடுத்தார் அவர்.

பையன் பார்த்தான். ஒரு ரூபாய் நோட்டுதான்; அவரிடம் சில்லரை இல்லை என்பதும் உண்மைதான்! அவன் சற்று நேரம் பேசாமல் நின்றான். ஏதோ யோசித்தான். யோசனையை சொல்லவோ பயந்தான். முடிவில் சொல்லவும் துணிந்தான். "ஐயா! நோட்டைக் கொடுங்களேன்; பக்கத்து தெருவில் இருக்கும் கடையில் மாற்றிக் கொண்டுவருகிறேன்" என்றான்.

அவர் "சரி; இந்தா!" என்று சொல்லிக் கொண்டே நோட்டை அவனிடம் நீட்டினார். ஆனால் நீண்ட கைகள் ஏனோ மீண்டும் தாழ்ந்தன. ஒரு ரூபாயை முன் பின் அறியாத ஒருவனிடம் கொடுக்கலாமா? அவனை நம்பலாமா?—என்ற சந்தேகங்கள் அவர் மனதிலே தோன்றின. தோன்றத்தானே செய்யும்!

கையில் கிட்டிய ரூபாய் எட்டிப் போவதைப் பார்த்தான் சிறுவன். அவர் முகத்தைப் பார்த்தான். அவரும் அவனைப் பார்த்தார். உற்றுப் பார்த்தார். அவன் கண்கள் — அதிலே நெளிந்தோடும் வறுமை-இவை தெரிந்தன. அந்தக் கண்களில் தோன்றிய ஏக்கம்—துக்கம்—இவை "நான் ஓடிவிட மாட்டேன் ஐயா, ஒரு ரூபாயுடன்!" என்று கெஞ்சுவதைப் போல இருந்தது!

அவர் அவனை நம்பிவிட்டார். ரூபாயும் கை மாறிவிட்டது. "இந்தாப்பா! சில்லரை மாத்தி ஓரணா எடுத்துக்கிட்டு பாக்கி பதினைந்தணாவைக் கொண்டு வந்து கொடு" என்றார்.

நன்றி நிறைந்த பார்வையுடன் அவன் பார்த்தான். நடந்தான்.

அவர் மறுபடியும் பேப்பருக்குள் மூழ்கிவிட்டார். ஆனால் சில்லரை மாற்றச் சென்றவன் வந்தானா? வரவில்லை. ஓரணா கேட்டவன் ஒரு ரூபாய் பெற்றான்; மீண்டும் திரும்பவில்லை—இந்த நடத்தையை என்னவென்று சொல்வது?

★ தொடர்ச்சி 10-ம் பக்கம்



## சிறிய வயதில் ★ பெரிய மனிதர்கள்

"பைத்தியக்காரன்! மனக் கோட்டை கட்டுகிறான்: மனம் வெந்து சாகப் போகிறான்" என்று சிலர், சிலரைப் பார்த்து கிண்டல் செய்வதை நாம் பார்க்கிறோம். அப்படிச் செய்யலாமா? உள்ளத்து ஆசைகளை வார்த்தைகளால் வெளிப்படுத்துவோரைக் கேலி செய்யலாமா? கூடவே கூடாது! ஏன் தெரியுமா? அந்த ஆசையின்பால் கொண்ட அசையாத பிடிப்பால் — அதன்பின் குலையாத முயற்சியால் — அவன் எண்ணம் ஓர் நாள் ஈடேறத்தான் செய்யும்! புரிகிறதா? இதோ, ஆதாரம் ஒன்று—அந்தப் 'பைத்தியக்காரன்' பட்டியலிலே சேர்க்கப்பட்ட ஒரு பையனின் கதை :

"படம் வாங்கலியோ படம்!" என்று கூவிக்கொண்டு செல்கிறான் ஒரு சிறுவன். அவன் கையிலே பூகோளப் படங்கள்! ஆனால், அந்தப் படங்களிலே, இன்று உலகிலுள்ள எல்லா கண்டங்களும் இல்லை! அரை குறைப் படம். ஏனெனில் அப்போது அதைத்தான் 'உலகம்' என்று நம்பிக் கொண்டிருந்தார்கள்.

பையன் நடுத் தெருவிலே நின்றான். ஒரு படத்தை விரித்தான் அப்புறம்...? அவன் குரல் கேட்கவில்லை. அவன் படத்திலேயே அமிழ்ந்து போனான். "இதோ என் நாடு—போர்ச்சுகல். இதிலிருந்து கப்பலில் புறப்படுவேன். நேரே போனால்...உலகம் உருண்டைதானே; இந்தப் பக்கம் இந்தியாவின் கரைக்குப் போய் விடலாம். சரியான வழி. இப்படித்தான் நான் போக வேண்டும்" என்று தானே பேச ஆரம்பித்து விட்டான்.

அப்போது அவன் தலையிலே 'நறுக்'கென்று ஒரு குட்டு விழுந்தது. திரும்பிப் பார்த்தான். தந்தை! அவருக்கு பொல்லாத கோபம்! பின், பிழைப்புக்கு வழிதேடி படம் விற்க அனுப்பினால், இப்படிப் 'பைத்தியக்கார' யோசனையா செய்து கொண்டிருப்பது? அவர் அவனை அடித்தார்; அவன் அழுதான். "ஐயா, மாலுமியே! அழுதது போதும், அதோ உங்கள் கப்பல்கள் வரிசை வரிசையாகக் காத்திருக்கின்றன. புறப்படுங்கள்!" என்று தந்தை கிண்டல் பேசினார். பின் கோபித்தார்.

பையன் என்ன செய்வான்? "படம் வாங்கலியோ படம்......" என்று விக்கிக் கொண்டே வியாபாரக் குரல் கிளப்பினான்; நடந்தான்.

"பைத்தியக்காரச் சிறுவன்!" என்றுதான் நீங்களும் சொல்வீர்கள். ஆனால் அவன் வளர்ந்து—பெரியவனாகி—நினைத்ததை சாதித்து முடித்தபின் என்ன சொன்னான் தெரியுமா? "நான் பைத்தியக்காரன்தான்! கடல் கடல்—கப்பல் கப்பல்—என்று பைத்தியம் பிடித்து நின்றதால் தான் இன்று அமெரிக்காவைக் கண்டுபிடித்த தீரன் என்று உலகம் போற்றுகிறது!" என்றான்; இந்தியாவை நினைத்து மிதந்து, அமெரிக்காவை கண்டுபிடித்த அந்த கிரிஸ்டோபர் கொலம்பஸ்!

# 'எழுத்தாணி'

ந. க. இராசு; செந்துறை.

(?) இயற்கை என்பது என்ன?

செயற்கை அல்லாதது!

வி. எஸ். ரத்தினம்; கிள்ளாங் லேன்; சிங்கை.

(?) காமராசர் வடநாட்டுத் தலைவர்களுடன் எந்த மொழியில் பேசுகிருர்?

காதலி காதலனிடம் பேசவும், அடிமை எஜமானனிடம் பேசவும் மொழியே தேவையில்லையே!

கே. வேலாயுதம்; புங்கம் பாளையம்.

(?) அறிவு, அனுபவம், தர்க்கம் ஆகியவைகளுக்கு இடமில்லாமல் போவது எப்போது?

இந்த வாரம் பரிசு பெறும் தோழர்:
(●) த. பாலு, புரசை, சென்னை

பழமைப் பித்தர்களிடம் அறிவியக்கம் கேள்வித்தாளை நீட்டும்போது!

நா. தனராஜ்; பெரம்பூர்.

(?) தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர் கக்கனுடைய விலாசம் என்ன?

கக்கன்; மேற்பார்வை, காமராசர் பொம்மலாட்டக் கம்பெனி; சென்னை—என்று எழுதுங்கள்.

என். பலராமன்; ஆரணி.

(?) ஒரு கற்றறிந்த இளம் நங்கை காவியம் புனையும் கவிஞன்; பகுத்தறிவு பேசும் செம்மல்; வாள் ஏந்தும் வீரன்-இவர்களில் யாரைக் காதலிக்கலாம்?

அவள் கற்றவளாதலால் காவியம் புனைவோனையும், 'அறிந்தவ' ளாதலால் பகுத்தறிவு பேசவோனையும், 'இளம்' நங்கையாதலால் வாள் பிடிப்போனையும் காதலிக்கலாம் — என யூகிக்கலாம்.

என். பெரியநாடான்; தூத்துக்குடி

(?) புரட்சி என்னும் வித்துவெற்றி என்னும் பலன் கொடுக்க அனுகூலமான சூழ்நிலை என்ன?

விழிப்புணர்ச்சி என்னும் வளமான பூமி; தெளிவான கொள்கை என்னும் தண்ணீர்; நல்லதலைவன் என்னும் ஒளிக்கற்றை—இவைதான்!

தியாகராசன்; சேர்வை நகர்.

(?) நேருவிடம் உள்ள சிறந்த பண்பு எது?

தென்னாட்டைச் சேர்ந்தவராயிற்றே என்பதால்கூட கோகிலவாணியின் இசை அவருக்குக் கசப்பதில்லை!

(?) எம். எஸ். சுப்புலட்சுமியை நேருவுக்கு எப்போது தெரியும்?

ஆச்சாரியாரைத்தான் கேட்க வேண்டும்!

டி. எஸ். ஆறுமுகம்; திருவாரூர்.

(?) இளங்கோ அடிகள் தீட்டியுள்ள சிலப்பதிகாரத்தில் வில்லன் யார்?

அதையும் புராணமாக்கும் பக்த கோடிகள்தான்!

(●) த. பாலு; புரசை.

[?] இந்தியாவிலேயே அதிகப் பருமனுள, கொழுத்த பிராணி எது?

மைசூர் மகாராஜாவும் அவரைப் போன்ற ராஜப் பிரமுகர்களும் தான்!

ஆ. சுப்புக்கானி; மாவுத்தன்பட்டி

[?] கொலைகாரியும், கொலைகாரனும் வாழ்க்கை நடத்தினால் எப்படி இருக்கும்?

'வாழ்க்கை' தற்கொலை செய்து கொள்ளும்!

தமிழ்த்தாசன்; மேல்புவனகிரி.

[?] இசைக்குத் தகுந்த பாடலா? அல்லது பாடலுக்குத் தகுந்த இசையா?

பண்டிதர் பாட, தேபர் ஆட நடந்து வருகிறதே காங்கிரஸ் கச்சேரி, அதை முழுதும் கவனித்த பிறகுதான் இதற்குப் பதில்கூற முடியும்.



ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி. 'முரசொலி' அச்சகம், 4/128, மவுண்ட்ரோடு, சென்னை-6.

